# புலவரின் வாழ்வும் பணியும்

பேராசிரியர்
டாக்டர். கோ. திருமாவளவன்

எழிலகம்
46, செல்வ விநாயகர் கோயில் தெரு
திருவத்திபுரம்-604407
சம்புவராயர் மாவட்டம்

# முன்னுரை

தமிழகத்தில் இருபதாம் நூற்றாண்டு வரலாற்றில் இடம்பெறத்தக்க வகையில் சிறந்த புலவராக, வரலாற்றறிஞராக, பேச்சாளராக, எழுத்தாளராக, நூலாசிரியராக, அரசியல்வாதியாக, போராட்டவாதியாக, சீர்திருத்தக்காரராக, சட்டப்பேரவைத் தலைவராக—என்று பல்திறன்படைத்து விளங்கிய எம் தந்தையார் புலவர் கா. கோவிந்தன் அவர்கள் சிறந்த தந்தையாகவும் திகழ்ந்தார். நல்ல குடும்பத் தலைவரான அவர் எங்கள் குடும்பத்தையே நல்ல பல்கலைக் கழகமாக்கியவர். 'சான்றோராக்குதல் தந்தைக்கடனே' எனும் வகையில் பெற்ற பிள்ளைகளை அறிவுச்செல்வங்களாக்கியவர்.

அவர் வீட்டுக்கு மட்டுமல்ல, நாட்டுக்கும் நல்ல தலைவராக வாழ்ந்தார். பதவியில் இருந்தபோதும் இல்லாதபோதும் ஊருக்காகவும் ஊர் மக்களுக்காகவும் உண்மையாக உழைத்தவர்.

இவ்வாறு வீட்டுக்கும் நாட்டுக்கும் நன்கு உழைத்த உத்தமரின் வரலாறு இது.

வாழ்விலும் தாழ்விலும், வெற்றியிலும் தோல்வியிலும் கொள்கைப் பிடிப்பிலிருந்து சிறிதும் வழுவாதவர். திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவர் டாக்டர் கலைஞர் அவர்களும், இனமானப் பேராசிரியர் அவர்களும் எங்கள் தந்தையாரிடம் இறுதிவரை பெருமதிப்பு காட்டி வந்தனர்.

வரலாறும், ஆன்றோர் அஞ்சலிகளும் இந் நூலில் இடம்பெற்றுள்ளன.

தந்தையாரின் நீத்தார் வழிபாட்டை யொட்டிய படத்திறப்பு விழாவின்போது இந்நூல் வெளிவருகிறது. நூல் குறுகிய காலத்தில் வெளிவர உதவிய அனைவருக்கும் நன்றி.

— கோ. திருமாவளவன்



புலவருக்கு அண்ணா விருது வழங்குதல்



புலவருக்கு திரு. வி. க. விருது வழங்குதல்



புலவர் சகோதரி, தம்பி நடராசன் அவர்களுடன்



புலவர் தன் தகப்பனார், துணைவியாருடன்



புலவரும் அவர் தம்பி நடராசனும் அவரவர்தம் துணைவியாருடன்

# புலவரின் வாழ்வும் பணியும்

"செய்யாறு பகுதி சுயமரியாதை இயக்கத்தின் கோட்டையாகவும், பகுத்தறிவு புரியாகவும், காஞ்சிபுரத்தில் இருந்த அண்ணா அவர்கள் அடிக்கடி வந்து கலந்துரையாடி, கழகக் கருத்துக்களைப் பகுத்தறிவு எண்ணங்களைப் பரிமாறிக் கொள்கின்ற பகுதியாகவும் திகழ்ந்து வந்தது. அப்படித் தொடக்க நாள் தொட்டு, சுயமரியாதை உரம் போடப்பட்டு தன்மான இயக்கம் தழைத்து வளர்ந்தது செய்யாறு வட்டத்தில்" என்று செய்யாறு பகுதியின் சிறப்பையும் திராவிட இயக்கத்தோடு அதற்குள்ள தொடர்பையும் படம் பிடித்துக் காட்டியுள்ளார் கழகத் தலைவர், கலைஞர் அவர்கள்.

அப்படிச் செய்யாறு வட்டத்தைத் திராவிட இயக்கத்தின் வலுமிக்க கோட்டையாக மாற்றிய கழகச் செயல் வீரர்கள் வரிசையில் புலவர் கோவிந்தன் அவர்களுக்குச் சிறப்பான இடம் உண்டு.

"நீண்ட நெடு நாட்களாகத் தன்மான இயக்கத்திலே தன்னை ஒப்படைத்துக் கொண்டு, பெரியாருக்

குத் தொண்டராகவும், அண்ணாவிற்குத் தம்பியாக வும், எங்களுக்கெல்லாம் நம்பிக்கைக்குரிய நண்பராக வும் திகழ்கிறவர்'' என்று கலைஞர் அவர்களால் பாராட்டப் பெற்ற புலவர் அவர்கள், திராவிட இயக்க வரலாற்றிலும், அத்துடன் இரண்டறக்கலந்து விட்ட தமிழகத்தின் ஐம்பது, அறுபது ஆண்டு கால வரலாற்றிலும் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள் ளார்.

### பெற்றோர்

சைவத்தையும், தமிழையும் தம் இரு கண்களெனப் போற்றி வாழ்ந்த குடும்பத்தில் பிறந்தவர் புலவர் கோவிந்தன் அவர்கள். 1915ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15ஆம்நாள், காங்க முதலியாருக்கும், சுந்தரம் அம்மையாருக்கும் ஆறாவது மகனாக அவர் பிறந் தார்.

அவருடன் பிறந்தவர்கள் எண்மர் என்றாலும் அவரினும் மூத்தவர்களும் இளையவர்களுமாகப் பிறந்த ஐவர் மறைவு எய்திட, ஒரு தமக்கையும், ஒரு தம்பியுமே எஞ்சி நின்ற நிலையில், ஆறாவதாகப் பிறந்தாலும் மூத்த மகனாகக் குடும்பப் பொறுப்பை ஏற்க வேண்டியவராகப் புலவர் ஆனார்.

### இளமைப் பருவம்

சைவமும் தமிழும் தழைத்தோங்கிய குடும்பத்தில் பிறந்த புலவர் அவர்கள், தம் இளமையில் தமிழ்ப் பற்றும் சைவப்பற்றும் கொண்டவராக விளங்கினார். இளமையில் கட்டுக் குடுமியும், காதில் கடுக்கனும், விபூதியும் சந்தனப் பொட்டும் துலங்கும் நெற்றி யோடும் சிறந்த பக்தியோடு சீலம் நிறைந்த சிறுவர் களாகப் புலவர் அவர்களும் அவர் தம்பி நடராசன் அவர்களும் வளர்க்கப்பட்டனர்.

நெசவுத் தொழிலையும் உழவுத் தொழிலையும் நம்பி வாழ்ந்தது அவர் குடும்பம். கைத்தறி ஆடைகளை ஊர் — ஊராகச் சென்று விற்று வந்தவர் அவர் தந்தை. நம் நண்பரு டன் கூட்டாகச் சேயாற்றங் கரையில் சிறிய அரிசி ஆலையையும் நடத்தி வந்தார். குடும்பத்திற்கென இருந்த நிலத்தைப் பராமரிக்கும் பொறுப்பை அன்னை சுந்தரம் அம்மையார் ஏற்றிருந்தார்.

கல்வி

அன்றைய கிராமச் சூழ்நிலைக்கேற்ப திண்ணைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்ட புலவர் அவர்கள், ஆற்று மணலில், கைவிரலையே எழுதுகோலாகப் பயன்படுத்தி, 'அகர முதல' எழுத்தெல்லாம் எழுதப் பயின்றார். பிறகு, செய்யாறு மாவட்ட உயர் நிலைப் பள்ளியில் உயர் கல்வி பயிலத் தொடங்கினார்.

1932ஆம் ஆண்டிலேயே தமிழன்னை, புலவர் அவர்களைத் தத்து எடுத்துக்கொண்டாள். செய் யாறு உயர்நிலைப்பள்ளியில், அன்று தமிழாசிரியரா கப் பணியாற்ற வந்த உரைவேந்தர், சித்தாந்த கலா நிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்களிடம் தமிழ் பயிலத் தொடங்கினார்,

ஔவை அவர்கள் கல்வியறிவோடு, அவ்வப் போது, மாணவர்களுக்குத் தமிழ்ப்பற்றையும் நாட் டுப் பற்றையும் அன்போடு குழைத்துக் குழைத்து ஊட்டினார்கள். புலவர் அவர்கள் செய்யாற்றில் ஔவை அவர்களிடம் தமிழ் கற்ற காலத்தில், அருகே யிருந்த காஞ்சியிலிருந்து அண்ணா அவர்களும், அங்கு வந்து ஔவை அவர்கள்பால் திருக்குறள் பாடம் கேட்டார். அதுவே அண்ணா அவர்களுக்கும் புலவர்

அவர்களுக்கும் இளமையிலேயே நெருங்கிய தொடர்பு ஏற்படக் காரணமாக அமைந்தது.

### ஔவைத் தமிழ் மாணவர் கழகம்

மாணவராயிருந்த அந்த நாளிலேயே தம் இல்லத்தில் தமிழ் வளர்ச்சிக்கென தம் ஆசிரியர் பெயராலேயே, அவரையே தலைவராகக் கொண்ட 'ஔவை மாணவர் தமிழ்க் கழகம்' என்ற அமைப்பு ஒன்றை உருவாக்கினார் ஔவைத் தமிழ்க் கழகத்தின் தலைசிறந்த மாணவராய் விளங்கி சிறப்புறு மரபில், வியத்தகு முறையில், தமிழ்த் தொண்டு ஆற்றினார். ஔவை மாணவர் தமிழ்க் கழகத்தின் சார்பில் ஔவை சு. துரைசாமி அவர்கள் உரையெழுதிய 'ஐங்குறு நூறு' இலக்கியத்தைப் பதிப்பித்து வெளியிட்டார்.

### புலவர் ஆனார்

1934ஆம் ஆண்டு பள்ளி இறுதித் தேர்வில் வெற்றி பெற்ற மாணவன் கோவிந்தன் அவர்கள், குடும்பச் சூழ்நிலையும், பொருளாதார வசதியின்மையும், வெளியூர் சென்று கல்லூரிப் படிப்பு படிக்க இடங் கொடுக்காத நிலையில், வீட்டிலிருந்தபடியே தனியாகத் தமிழ் படிக்கத் தொடங்கினார்.

தமது 16ஆவது வயதில் முறையாகத் தமிழ் பயிலத் தொடங்கிய அவர், தமது 24-ஆவது வயதில் 1940ஆம் ஆண்டு தமிழ் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார் "வித்துவான் கோவிந்தன்" ஆனார். வித்துவான் என்ற வடமொழிச் சொல்லைப் 'புலவர்' என்ற தூய தமிழ்ச் சொல்லாக மாற்றி, தம் பெயரோடு இணைத்துக் கொண்டார் "புலவர் கோவிந்தன்" ஆனார். இன்று தமிழ் நாட்டில் 'புலவர்' என்றால்

அச் சிறப்புப் பெயர் புலவர் கோவிந்தன் அவர் களையே குறிக்கும் அளவுக்கு அந்தப் பட்டம் அவ ரோடு இணைந்து விட்டது.

### அரசியல் ஈடுபாடு

உயர்நிலைப் பள்ளியில் படிக்கின்ற காலத்தி லேயே, புலவர் அவர்கள் தமிழ் உணர்வும், தமிழன் என்ற இன உணர்வும் கொண்டு தொண்டாற்றத் தொடங்கினார். இந்த உணர்வுகளின் சின்னமாக, அன்று விளங்கிய நீதிக்கட்சி அவரை ஈர்த்தது.

1934ஆம் ஆண்டு, பள்ளிப் படிப்பை முடித்தபின், கொஞ்சம் கொஞ்சமாகப் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் சுயமரியாதை இயக்கக் கொள்கைகளி னால் ஈர்க்கப்பட்டார். அதே நேரத்தில் மறைமலை யடிகளார், ஞானியாரடிகள், ந. மு. வேங்கடசாமி நாட்டார், நாவலர் சோமசுந்தர பாரதியார், தமிழ வேள் உமா மகேசுவரம் பிள்ளை, தமிழ்த் தென்றல் திரு. வி. க. போன்ற தமிழறிஞர்களோடு நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருந்தார்.

### 1936 ஆம் ஆண்டு தமிழ்ப் பணி

1936 ஆம் ஆண்டு வைகாசித் திங்களில், திருவத்தி புரத்தில், ஒளவை மாணவர் கழகத்தின் முதலாண்டு விழாவினை நடத்தினார். தம் தெருவிலேயே பெரிய பந்தல் போட்டு, மறைமலை அடிகளார் தலைமை யில், மூன்று நாள் விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்.

அம்மாநாட்டிற்கு வந்திருந்த கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர், தமிழவேள், உமாமகேசுவரனார் அவர்கள், தமிழ்ச் சங்கத்து வெள்ளிவிழா மலரைத்

தம் கையெழுத்திட்டுப் புலவர் அவர்களுக்கு வழங்கினார்கள். அம்மலரைத் தமிழவேள் அவர்கள் தம் கைப்பட எழுதித் தந்த மலரை, கடைசி வரை அரும் பொருளாகப் போற்றி வந்தார்கள்.

## 1937-ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்பு இயக்கம்

1937-ஆம் ஆண்டு சென்னை மாநில பிரதம அமைச்சராக இருந்த சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியார் கட்டாய இந்தியைப் புகுத்தினார். இந்தித் திணிப்பை எதிர்த்துத் தமிழகம் போர்க்கோலம் பூண்டது. அந்த இயக்கத்தில் தன்னையும் இணைத்துக் கொண்ட புலவர் அவர்கள், முழு நேர அரசியலில் அடியெடுத்து வைத்தார்.

திருவத்திபுரத்தில் ஓர் இந்தி எதிர்ப்பு மாநாட்டை 1938 ஏப்ரல் 30-இல் கூட்டினார். நல்ல தமிழ் உணர்வின் முழு உருவாய் தமிழவேள் உமா மகேசுவரம் பிள்ளையும், தமிழ் உணர்வோடு அரசியல் இழையோடிய உணர்வின் உருவாய் நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்களும், அரசியல் உணர்வின் முழு உருவாய் தலைவர் பெரியார் அவர்களும் இணைந்து நின்று பங்கேற்ற அம்மாநாடு, புலவர் அவர்கள் கடந்து வந்த பாதையினைக் குறிப்பதாய் அமைந்திருந்தது.

## தந்தையின் மனக்குறை

புலவர் அவர்களின் பொது வாழ்க்கையில் ஈடுபாடும், கட்சிப் பணியும் அவருடைய குடும்ப வாழ்க்கையைப் பெரிதும் பாதிக்கத் தொடங்கியது, 1936-ஆம் ஆண்டு அவருக்குத் திருமணமாயிற்று. தம் 20-ஆவது வயதில் தம்முடைய மாமன் மகள் கண்ணம்மாவை மணந்தார். 1940-ஆம் ஆண்டில்

அவர் குடும்பத் தலைவர். ஒரு மகனுக்குத் தந்தை. வயதான தந்தைக்கு ஓய்வளித்து, குடும்பப் பொறுப்பை ஏற்க வேண்டிய சூழ்நிலை.

### ஆசிரியப் பணி

குடும்பத்தின் மூத்த மகன் என்ற நிலையில், குடும்பத் தலைவர்—தந்தை என்ற பொறுப்பில்' தாம் ஆற்ற வேண்டிய கடமைகளை எண்ணி அவற்றை நிறைவேற்ற 1941-ஆம் ஆண்டு, ஆசிரியர் பணியில் சேர்ந்தார். வேலூர் நகரில், திருமலை திருப்பதி தேவஸ்தானம் நடத்திய வெங்கடேசுவரா உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். 1943-ஆம் ஆண்டு வரை பணி புரிந்தார். பல ஊர்களுக்கும் சென்று இலக்கியச் சொற்பொழிவு ஆற்றி வந்தார். புலவர் அவர்கள் வேலூர் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்தபோது அவரிடம் கல்வி பயின்ற மாணவியருள் ஒருவர் திருமதி. மணியம்மை ஆவார்.

1943-ஆம் ஆண்டு தமிழக அரசியலில் ஏற்பட்ட மாறுதல்கள், திருப்பங்கள், புலவர் அவர்களை மீண்டும் முழு நேர அரசியலில் ஈடுபட வைத்தது. அறிஞர் அண்ணா அவர்களின் அழைப்பை ஏற்று, ஆசிரியர் பணியைத் துறந்து. தமிழர்களின் தன் மானங்காக்க அரசியலில் முழுமூச்சாகப் பாடுபடத் தொடங்கினார். அதே நேரத்தில் வீட்டிலிருந்த படியே தனிப் பயிற்சியாகப் பயின்று சென்னைப் பல்கலைக் கழகத்தின் பி.ஓ.எல்,, எம்.ஏ. ஆகிய பட்டங்களைப் பெற்றார்.

### சந்திரோதயம் அரங்கேற்றம்

தம் தொடக்க கால அரசியல் வாழ்வில் அறிஞர் அண்ணா அவர்கள் தன் திட்டங்களின் பயிற்சிக் கள

மாகத் திருவத்திபுரத்தைத்தான் தேர்ந்தெடுத்திருந் தார். அதற்குக் காரணம் புலவர் அவர்களிடம் அண்ணா அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கைதான். 1943-ஆம் ஆண்டு, அறிஞர் அண்ணா அவர்களின் முதல் படைப்பான 'சந்திரோதயம்' என்ற சமூக சீர் திருத்த நாடகத்தை அரங்கேற்றும் பொறுப்பைப் புலவர் அவர்கள் ஏற்றார். தந்தை பெரியார் அவர் கள் தலைமையில், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் அவர்கள் முன்னிலையில், அறிஞர் அண்ணா அவர்கள் நடித்த 'சந்திரோதயம்' நாடகம் அரங்கேறியது.

### திராவிடர் கழகப் பணி

1944, ஆகஸ்டு 27-ஆம் நாள், சேலம் மாநாட்டில் நீதிக்கட்சி, திராவிடர் கழகமாக மாறியது. பொதுச் செயலாளர் அறிஞர் அண்ணா அவர்கள் செயல்திறத் தால், அது மக்கள் இயக்கமாக மாறியது. திராவிடர் கழகத்தின் முன்னணி வீரர்களில் ஒருவராகப் புலவர் அவர்கள் செயல்பட்டார். பொங்கல் திருநாளைத் தமிழர் திருநாளாகக் கொண்டாட வேண்டும் என்ற அறிஞர் அண்ணா அவர்களின் விருப்பத்தையேற்று திருவத்திபுரம் நகரில் மிகப் பெரிய விழாவாக ஆண்டு தோறும் தைத் திங்கள் 10 நாட்கள் தொடர்ச்சியாக நடத்தினார். தமிழ்த் தென்றல் திரு.வி.க. ஔவை துரைசாமிப் பிள்ளை போன்ற தமிழ்ச் சான்றோர் பலரையும், தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, மற்ற கழக முன்னணியினரையும் அதில் பங்கு கொள்ள வைத்தார்.

1948-இல் நடைபெற்ற பொங்கல் விழாவில் சனவரி 18 அன்று திருவாளர்கள் திரு. வி. க. க.அன்பழகன் அவர்களும்- 19 அன்று பெரியார் அவர் களும், சி.வி.எம். அண்ணாமலை அவர்களும், 20அன்று

அண்ணா அவர்களும், பங்கு கொண்டனர்! 21 அன்று நாடகம்; 22 அன்று புதுவை வினாயகம் அவர்கள் இசையரங்கு. 23 அன்று, புரட்சிக் கவிஞர் பாரதி தாசன் அவர்களும், தோழர் ஜீவரத்தினம் அவர்களும், 24 அன்று தோழர் திருச்சி. டி. பி. வேதாசலம், ஒளவை சு. துரைசாமி அவர்களும், 25 அன்று, என், எஸ்.கே, அவர்களும், டாக்டர் தர்மாம்பாள் அம்மையார் அவர்களும் பங்கு கொண்டனர். இவ்வாறு பொங்கல் விழாவைத் தொடர்ந்து நடத்தி வந்தார்.

## திருவத்திபுரத்தில் முதல் சுயமரியாதைத் திருமணம்

தந்தை பெரியார் அவர்கள், திராவிட இயக்கத்தின் ஒரு கொள்கையாக உருவாக்கியது புரோகிதர் இல்லாத, சடங்குகள் இல்லாத சுயமரியாதைத் திருமணம் செய்யும் முறை. தொடக்க காலத்தில் பழமையில் ஊறிப்போன சமுதாயத்தில் இத்தகைய சுயமரியாதைத் திருமணங்களுக்குக் கடுமையான எதிர்ப்புகள் இருந்தன. அப்படிப்பட்ட சூழ்நிலையில் புலவர் அவர்கள் தன்னுடைய தம்பிக்கு—சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் முதல்வராகப் பணி புரிந்து ஓய்வு பெற்றிருக்கும் டாக்டர் நடராசன் அவர்களுக்கு—சுய மரியாதைத் திருமணம் செய்து வைக்க எண்ணினார். சைவப் பழயாக ஊருக்கே பெரியவராக விளங்கிய, தம்முடைய தந்தையாரையும் சம்மதிக்க வைத்தார். 1946-ஆம் ஆண்டு, ஜூன் 3-ஆம் நாள் புலவர் அவர்களுடைய தம்பி நடராசன் அவர்களுடைய சுயமரியாதைத் திருமணம், தந்தை பெரியார் அவர்கள் தலைமையில் நடந்தது,

## கவர்னர் ஜெனரலுக்குக் கறுப்புக் கொடி

194 -ஆம் ஆண்டு தந்தை பெரியாரை அழைத்து மாபெரும் மாநாடு ஒன்றைத் திருவத்திபுரத்தில்

புலவர் அவர்கள் நடத்தினார். அந்த மாநாட்டு ஊர்வலத்தில் தலைவர் பெரியார் அவர்கள் அலங்கரிக்கப்பட்ட தேரில் பவனி வந்தபோது, கடைவீதியில் மூவர்ணப் பதாகைகளைக் கட்டி, அந்த வழியில் பெரியார் அவர்கள் செல்லவிடாமல் தடுக்க காங்கிரஸ்காரர்கள் முயன்றனர்.

இப்படி அரசியல் நாகரீகமற்ற முறையில் காங்கிரஸ்காரர்கள் நடந்து கொண்டதற்குச் சரியான பாடம் புகட்ட புலவர் அவர்களும் கழகத் தோழர்களும் திட்டமிட்டனர். திருவத்திபுரத்திற்கு வருகை தரவிருந்த கவர்னர் ஜெனரல் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாருக்குக் கறுப்புக் கொடி காட்டத் திட்டமிடப்பட்டது. நகரம் முழுவதும் நீள நீளமான கறுப்புப் பதாகைகள் கட்டப் பட்டன. யானை மீது அம்பாரியில் அமர்ந்து பவனிவந்த கவர்னர் ஜெனரல் கறுப்புக் கொடிக் கடலில் மிதக்க விடப்பட்டார்.

**இரணியன் அல்லது இணையற்ற வீரன்**
**நாடகத் தடை மீறல்**

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் எழுதிய 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்ற நாடகத்திற்கு, அன்றைய அரசு விதித்திருந்த தடையை உடைக்க வேண்டுமென அறிஞர் அண்ணா அவர்கள் திட்டமிட்டார். தடையை மீறி 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகத்தைத் திருவத்திபுரத்தில் அரங்கேற்றும் பொறுப்பை அண்ணா அவர்கள் புலவர் அவர்களிடம் ஒப்படைத்தார்.

திருவத்திபுரம் நகரத்தில், 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகம் தடையை மீறி நடிக்கப்படும் என்ற செய்தி விடுதலை நாளேட்டில் வெளியிடப்பட்டது. திருவத்திபுரத்தில் 144 தடையுத்தரவு

போடப்பட்டது. வேலூரிலிருந்து ரிசர்வ் போலீஸ் படை லாரிகளில் கொண்டு வந்து குவிக்கப்பட்டது. அத்தனை அமளிக்கும் இடையே. நகரின் ஒரு மூலை யில் 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகம், தொடங்கி நடந்து கொண்டிருந்தது. பாதி நாடகம் முடிந்த பின்னரே, 'நாடகம் இங்கு தான் நடக்கிறது' என்ற செய்தி கழகத் தோழர்களால் போலீசாருக்கு அறிவிக்கப்பட்டது. போலீசார் ஓடோடி வந்தனர். நாடக ஒப்பனையோடு இருந்த இரணியன், பிரகலாதன், நரசிம்ம அவதாரம் போன்ற வேடங் களிட்டிருந்த நடிகர்களைக் கைது செய்து வண்டியில் ஏற்றிச் சென்று சிறையில் அடைத்தனர்.

நாடகத்தில்தலைமை ஏற்றதோழர் பூங்காவனம் ஒருவர் மட்டுமே, திருவத்திபுரத்தைச் சேர்ந்தவர். நடித்தவர்கள் எல்லாம் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த, துரை அச்சக உரிமையாளர் சம்பந்தம், நகரச் செய லாளர் மார்க்கு மற்றும் காஞ்சிபுரம் தோழர்கள் ஆவர்.

இந்தப் போராட்டத்தைப் பாராட்டி அறிஞர் அண்ணா அவர்கள் தம்முடைய திராவிட நாடு இதழில் 'திருவத்திபுரத்தில் இரணியன் கைது, மகா விஷ்ணு கைது!' என்று செய்தி வெளியிட்டார்.

### முதல் சிறைவாசம்

194?-ஆம் ஆண்டில் கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்ற சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் அவர்கள் சென்னைக்கு வந்தபோது அவருக்குக் கறுப்புக் கொடி காட்ட திராவிடர் கழகம் முடி வெடுத்தது. அந்தத் திட்டத்தைப் பற்றி ஆராய திராவிடர் கழகப் பொதுக்குழு சென்னை அண்ணா சாலையை அடுத்த மீரான் சாயபு தெருவில் உள்ள

கழகத் தலைமை இடத்தில் கூடியது. புலவர் அவர்களும் கலந்து கொண்டார். கூட்டம் நடந்து கொண்டிருந்தபோதே, பெரியார், அண்ணா உட்பட பொதுக்குழு உறுப்பினர்கள் அனைவரும் கைது செய்யப்பட்டனர். புலவர் அவர்களும் கைது செய்யப்பட்டு சென்னை மத்திய சிறையில் அடைக்கப்பட்டார்.

## திராவிட முன்னேற்றக் கழகம் உதயம்

1949-ஆம் ஆண்டு செப்டம்பர் 17 ஆம் நாள் தந்தை பெரியார் அவர்களுடன் ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாக திராவிடர் கழகத்திலிருந்து விலகிய தோழர்கள் அறிஞர் அண்ணாவின் சீரிய தலைமையில் திராவிட முன்னேற்றக் கழகம் கண்டனர்.

110 உறுப்பினர்களைக் கொண்ட தி. மு. கழகத்தின் முதல் பொதுக் குழுவிலும், 30 உறுப்பினர்களைக் கொண்ட பிரசாரக் குழுவிலும் புலவர் அவர்களும் இடம் பெற்றிருந்தார்.

## 'போராட்டம்' வார இதழ்

கழகத்தின் பிரசாரக் குழுவில் இடம் பெற்றிருந்த புலவர் அவர்கள், திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச் சொல்லப் போதிய ஏடுகள் இல்லை என்பதை எண்ணி, திருவத்திபுரம் நகரிலிருந்து, தம் இயக்க நண்பர்கள் துணையோடு, 'போராட்டம் என்ற பெயரில் வார இதழ் ஒன்றைத் துவக்கினார். 'போராட்டம்' வார இதழை அறிஞர் அண்ணா அவர்களே தொடங்கி வைத்து 'போராட்டம்' என்ற தலைப்பிலேயே உரையாற்றினார். ஐந்தாண்டு காலம் வரை வெளிவந்த

'போராட்டம்' இதழில் 'புலவர்', 'புலவர்கோ' என்ற புனைபெயரில் இலக்கியக் கட்டுரைகளையும் 'கேஜி', 'நளன்' போன்ற பெயர்களில் அரசியல் கட்டுரைகளையும் புலவர் அவர்கள் எழுதினார்.

### பொங்கல் விழா

புதுப் பொலிவுடன் பொங்கல்விழா நிகழ்ச்சிகள் திருவத்திபுரம் நகரில் கொண்டாடப்பட்டன. ஆண்டு தோறும் தவறாமல் அறிஞர் அண்ணா அவர்கள் பங்கேற்ற இப்பொங்கல் விழா நிகழ்ச்சிகளில் கலைஞர், நாவலர், பேராசிரியர் போன்ற கழக முன்னணியினர் பங்கேற்று கருத்தாழமிக்க சொற் பொழிவுகளை ஆற்றினர். கலைஞர் அவர்கள் நடித்த 'இளைஞன் குரல்,' நடிப்பிசைப் புலவர் பங் கேற்ற அறிஞர் அண்ணா அவர்களின் 'ஓர் இரவு' போன்ற நாடகங்கள் நடத்தப்பட்டன.

### ஆரியமாயை தடை மீறல்

ஆட்சியாளர்களின் அடக்கு முறையினால் அறிஞர் அண்ணா அவர்கள் எழுதிய 'ஆரியமாயை' என்ற நூல் தடை செய்யப்பட்டது. 23-10-1950 இல் கூடிய தி.மு. கழக செயற்குழு தடை செய்யப்பட்ட நூல்களில் உள்ள கருத்துக்களைத் தடையை மீறி நாட்டில் பரப்ப வேண்டும் என்ற திட்டத்தை அறிவித்தது. 1-3-1951 அன்று, வட ஆற்காடு மாவட் டத்தில் 'ஆரியமாயை' நூல் 150 இடங்களில் தடையை மீறிப் படிக்கப்பட்டது. திருவத்திபுரம் நகரில், நாற் சந்திகளிலெல்லாம் மக்கள் கூட்டத்தின் முன்பு புலவர் அவர்களும் மற்ற தோழர்களும் தடை செய்யப் பட்ட ஆரியமாயை நூலைப் படித்தனர்.

### திருவத்திபுரத்தில் திராவிட இயக்க எதிர்ப்பு மாநாடு

1951-ஆம் ஆண்டு, காங்கிரஸ் கட்சியின் துணைப் பிரிவாக விளங்கிய ம.பொ.சிவஞானத்தின் தமிழரசுக் கட்சியின் சார்பில் திராவிட இயக்க எதிர்ப்பு மாநாடு நடத்தப்பட்டது. அம் மாநாடு முடிந்த மறுநாளே, மாநாடு நடந்தஅதே இடத்தில் தி.மு. கழகத்தின் கொள்கை விளக்கக் கூட்டம் நடத்தப்பட்டது. அக்கூட்டத்தில் தனியொரு பேச்சாளராக புலவர் அவர்கள் நின்று, ஐந்து மணி நேரத்திற்கும் மேலாக, மாநாட்டில் பேசப்பட்ட கருத்துக்களுக்கு ம.பொ. சிவஞானம் நடத்தி வந்த 'தமிழ்முரசு' இதழ்களிலிருந்தே மேற்கோள்களை எடுத்துவைத்து, மறுப்புக்களைத் தந்து, ஆற்றிய பேருரை, மக்களின் மனதில் கழகத்தின் கருத்துக்களை ஆழமாகப் பதியவைத்தது. அடுத்து நடந்த 1952-ஆம் ஆண்டு முதல் பொதுத் தேர்தலில் செய்யாறு, வந்தவாசி தொகுதிகளில் தி.மு. கழக ஆதரவு பெற்ற வேட்பாளர்களை வெற்றி பெற வைத்தது.

### சட்ட மன்ற நுழைவு

1952-ஆம் ஆண்டு நடைபெற்ற முதல் பொதுத் தேர்தலில் தி.மு.கழகம் போட்டியிட மறுத்தது. ஆனால் கழகத்தின் கொள்கையை ஏற்றுக் கொண்டு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட வேட்பாளர்களுக்கு ஆதரவு அளித்தது. செய்யாறு சட்டமன்றத் தொகுதியில் உக்கல் தர்மலிங்க நாய்க்கர் அவர்களும், அது உள்ளிட்ட காஞ்சிபுரம் பாராளுமன்றத் தொகுதியில், டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி அவர்களும் கழக ஆதரவு பெற்ற வேட்பாளர்களாகப் போட்டியிட்டனர். அவர்களுக்காகப் பாடு

பட்ட புலவர் அவர்கள், அவர்களை வெற்றி பெற வைத்தார்.

1956, மே திங்கள் 17, 18, 19, 20 ஆகிய நாட்களில் திருச்சியில் கூடிய தி.மு. கழக இரண்டாவது மாநில நாட்டில் பெருவாரியான உறுப்பினர்கள்விருப்பப்படி அடுத்த 1954 ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் போட்டியிட தி.மு.கழகம்முடிவெடுத்தது. செய்யாறு தொகுதியில் போட்டியிடும் தி.மு.கழக வேட்பாள ராக புலவர் அவர்களின் பெயர் அறிவிக்கப்பட்ட போதும், குடும்பச் சூழ்நிலை காரணத்தால் அவர் போட்டியிடுவதினின்றும் விலக்குப் பெற்றார்.

அடுத்து நடந்த மாவட்ட ஆட்சிமன்றம், நகராட்சி, ஊராட்சி மன்றங்களில் போட்டியிட வேண்டும் என்ற தி.மு.கழக பொதுக்குழு முடிவை யொட்டி 1958-ஆம் ஆண்டு, திருவத்திபுரம் பேரூராட்சிக்குப் போட்டியிட்டுத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

### 1962-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல்

செய்யாறு தொகுதியில் புலவர் அவர்கள் போட்டியிட்டே தீர வேண்டும் என்ற அறிஞர் அண்ணா அவர்களின் கட்டளையை ஏற்று முதன் முறையாகச் சட்டமன்றத் தேர்தலில் போட்டி யிட்டார். ஆள் பலம், பண பலம், சாதி பலம் அத்தனைக்கும் எதிராகப் பாடுபட்டு வெற்றி பெற்றார். முதன் முறையாகச் செய்யாறு தொகுதி மக்கள் புலவர் அவர்களைத் தேர்ந்தெடுத்தனர். வெற்றி பெற்ற ஐம்பது சட்டமன்ற உறுப்பினர் களைத் தமிழக மக்களுக்கு நன்றி கூறவும், வாக்களித்த பெரு மக்களுக்கு நன்றி கூறவும் சென்னை மெரினா கடற்கரையில் நடந்த மாபெரும்

பொதுக் கூட்டத்தில் புலவர் அவர்களை அறிமுகப் படுத்திய அறிஞர் அண்ணா அவர்கள், "செய்யாறு தொகுதியில் வெற்றி பெற்றுள்ள புலவர் கோவிந்தன் அவர்கள் நல்ல தமிழ்ப் புலவர். சிறந்த ஆராய்ச்சி யாளர். 20 ஆண்டுகளாக பொதுவாழ்வுக்கென தன் வாழ்வை அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் எழுதிய ஏடுகள் நாட்டில் உள்ள நல்லவர்களால் போற்றிப் பாராட்டப்படுகின்றன. அவர் தமிழுக் கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் நாட்டிற்கும் தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்' என்று புகழாரம் சூட்டினார்.

முதன் முறையாக, 1962-ஆம் ஆண்டு சட்டமன்ற உறுப்பினராகக் கோட்டைக்குள் நுழைந்த புலவர் அவர்கள், 1962 லிருந்து 1967 வரை, ஐந்தாண்டுக் காலம், எதிர்க்கட்சி உறுப்பினராகச் செயல்பட்டார். அந்த நிலையில் புலவர் அவர்கள் பங்கு கொண்ட விவாதங்கள், நிகழ்த்திய உரைகள், எழுப்பிய வினாக் கள் ஆகியன யாவும் அவரை அரசியல் வானில் ஒளி வீசும் பெரு நட்சத்திரமாக நாட்டுக்கு அறிமுகப் படுத்தின. அந்தக் கட்டத்தில் சட்டமன்றத்திலேயே அதிகக் கேள்விகளை எழுப்பியவர் என்ற சிறப்பை யும் பெற்றார்.

### இந்தி எதிர்ப்புப் போர்

1963, அக்டோபர் 13 ஆம் நாள் சென்னையில் கூட்டப்பட்ட இந்தி எதிர்ப்பு மாநாட்டில் அறிஞர் அண்ணா அவர்கள் இந்தி எதிர்ப்பு அறப் போர் திட்டத்தை அறிவித்தார். 1963 நவம்பர் 17-ஆம் நாள் முதல் 1965 ஜனவரி வரை மாவட்டந் தோறும், அரசியல் சட்டத்தின் 17ஆவது மொழிப் பிரிவை தீயிட்டுக் கொளுத்துவது, மத்திய அரசு அலுவலகங்

களின் முன் மறியல் செய்வது என்று திட்டமிடப் பட்டது. அத்திட்டத்தின்படி 1-11-1964 முதல் 14-11-64 வரை மறியல் செய்யும் ஐவர் அணியில் புலவர் அவர்கள் பெயரும் இடம் பெற்றிருந்தது.

## அண்ணா அவர்களுக்கு வழியனுப்பு விழா

1963, நவம்பர் 17-ஆம் நாள் மொழிப் பிரிவைத் தீயிட்டுக் கொளுத்தி, இந்தி எதிர்ப்பு அறப்போரைத் துவக்க விருந்த அறிஞர் அண்ணா அவர்களுக்கு நவம்பர் 14-ஆம் நாள் நள்ளிரவில் திருவத்திபுரம் நகரில் மிகப்பெரிய வழியனுப்பு விழாவைப் புலவர் அவர்கள் நடத்தினார்.

அக்கூட்டத்தின் போது, "இந்திப் போராட்டத்தில், தங்களுக்கு இந்த அரசு எப்படியும் ஆறு மாதச் சிறைத் தண்டனை கொடுத்துவிடும். அதைப் பயன் படுத்திக் கொண்டு, திருவள்ளுவருக்குப் பிறகு நிலைத்து நிற்கும் திருக்குறள் போல், தங்களுக்குப் பின்னரும் நிலைத்து நிற்கும் ஒரு பெரிய நூலை எழுதி முடிக்கவேண்டும்" என்ற அன்பு வேண்டு கோளை விடுத்ததோடு ஒரு ரீம் வெள்ளைத் தாள் களையும், ஒரு இங்க் பாட்டிலையும் விலை உயர்ந்த ஷீபர் என்ற பேனாவையும் கொடுத்தார் புலவர். அவற்றைப் பெற்றுக் கொண்ட அண்ணா, "நூல் எழுதவேண்டும் என்று புலவர் இவற்றையெல்லாம் கொடுத்தார், ஒன்று சொல்கிறேன்; நான் சிறையுள் இருக்கும் போது கழகத்தோழர்கள், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு குலையாமல் கழகப் பணி புரிவார்களே ஆனால், தாள்கள் இல்லாமலே நூல் உருவாகும்; மை இல்லாமலே பேனாவிலிருந்து எழுத்துக்கள் உதிரும்; ஆனால் நான் சிறையில் இருக்கும் போது, வெளியில் இருக்கும் கழகத் தோழர்கள்

கட்சிப் பணி ஆற்றத் தவறி விடுவார்களே ஆனால், இவ்வளவு தாள்களிலும் இந்த ஒரு பாட்டில் இங்க்கும் அற்றுப் போகும்வரை, "நம்பிக்கெட்டேன்; நம்பிக் கெட்டேன்" என்று நான் எழுதித் தீர்ப்பேன்" என்று கூறிய சொற்கள் அம்மாபெரும் வழி அனுப்புக் கூட்டத்திற்கு வந்திருந்தோர் உள்ளத்தில், இன்றும் ஒலித்துக் கொண்டுதான் இருக்கும்; அதில் ஐயம் இல்லை.

போராட்டத்திற்கு முன் அண்ணா அவர்கள் பங்கு கொண்ட கடைசி நிகழ்ச்சி அது. நவம்பர் 16-ஆம் நாள் அண்ணா அவர்கள் கைது செய்யப் பட்டார்.

இந்தி எதிர்ப்பின் சின்னமாக, அதற்குத் தன் எதிர்ப்பைக் காட்டும் வகையில் தி.மு.கழகம் 1965, ஜனவரி 26-ஆம் நாளை, குடியரசு நாளைத் துக்க நாளாகக் கொள்வது என்று முடிவெடுத்து. வீடு தோறும் கறுப்புக் கொடியேற்ற மக்களை வேண்டிக் கொண்டது. அரசு அடக்கு முறையில் ஈடுபட்டது. கழகத் தோழர்கள் வேட்டையாடப் பட்டனர். புலவர் அவர்களும் பாபுஜனார்த்தனம் அவர் களும் கைது செய்யப்பட்டு திருவத்திபுரம் சிறையில் காவலில் வைக்கப்பட்டனர்.

### செங்கற்பட்டு மாவட்ட தி.மு. கழக மாநாடு

1966-ஆம் ஆண்டு, அக்டோபர் 15, 16, நாட்களில் செங்கற்பட்டு நகரில், செங்கற்பட்டு மாவட்ட தி.மு. கழக மாநாடு நடைபெற்றது. மாநாட்டின் திறப் பாளராக புலவர் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார். மாநாட்டைத் துவக்கி வைத்து திறப்புரை யாற்றிய புலவர் அவர்கள், "அணைவதற்கு முன்பு சுடர் விட்டு எரியும் விளக்கு, இறப்பதற்கு முன்பு

களையுடன் ஒளிவிடும் கண்கள், அது போலத்தான் இன்று இறுதிக்காலத்தில் காங்கிரஸ் கட்சி உள்ளது. அந்த காங்கிரஸ்காரர்களைத் தோல்வியுறச் செய்து புதிய ஆட்சியை அமைக்க அண்ணாவின் கரத்தை வலுப்படுத்துங்கள். 1967 பொதுத் தேர்தலில் அண்ணா அவர்களின் கரத்தை வலுப்படுத்துங்கள்'' என்று வேண்டுதல் விடுத்தார்.

1967-ஆம் ஆண்டு பொதுத் தேர்தல்

செய்யாறு தொகுதியில் பலமுனைப் போட்டியில் புலவர் அவர்கள் 20,000 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றார். தி.மு. கழகம் 137 இடங்களைக் கைப்பற்றி தனிப் பெரும்பான்மை பெற்ற கட்சியாக விளங்கியது. அண்ணா அவர்களை முதலமைச்சராகக் கொண்ட தி.மு. கழக ஆட்சி மலர்ந்தது.

சட்டமன்றப் பேரவைத் துணைத்தலைவர்!

புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றத்தின் பேரவைத் துணைத் தலைவராக புலவர் அவர்கள் 1967, மார்ச் 17-ஆம் நாள் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சட்டமன்றப் பேரவைத் துணைத் தலைவராகப் பொறுப்பேற்ற போது, புலவர் அவர்களை, தமிழக முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள் "புலவர் கோவிந்தன் அவர்கள் தரணியில் மற்ற நாடுகள் எல்லாம் ஆட்சிமுறை அமைத்துக் கொள்ளாத காலத்திலே உலகமே பார்த்து மெச்சத் தக்க விதத்தில், மாண்பு மிக்க வகையில், அரசியலை நடத்தி வந்த தமிழகத்தின் அருமை பெருமைகளை, இலக்கிய வாயிலாகவும், வரலாறுகள் வாயி

லாகவும் நன்றாக அறிந்திருப்பவர்கள். எந்த முறையில் அவை நடத்தப்பட வேண்டும் என்பதைப் பற்றி ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே அறிந்த தமிழகத்தின் தனிப் பெருமையை அதனுடைய கருத்துக் கருவூலங்களை இலக்கியங்கள் மூலமாக நன்றாக அறிந்திருப்பவர்கள். கருத்துக் கருவூலங்களின் மூலம் அறிந்திருக்கின்ற அந்த எண்ணங்களைக் கடந்த ஐந்தாண்டுகளில் இந்த அவையின் உறுப்பினராக இருந்த போது மேலும் செம்மைப் படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இந்த சட்ட மன்றத்தின் துணைத் தலைவராக அமர்வது நமக்கெல்லாம் நல்வாய்ப்பினை அளிப்பதாக அமைந்திருக்கிறது'' என்று பாராட்டினார்கள்.

புலவர் அவர்கள் பேரவைத் துணைத் தலைவராகச் செயல்பட்ட காலத்தில்தான் பல முக்கியமான சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன.

1967, ஜூலை 17-ஆம் நாள் சுயமரியாதைத் திருமணச் சட்ட வரைவு கொண்டு வரப்பட்டது. 1967, ஜூலை 18-ஆம் நாள் வரலாற்றுப் புகழ் வாய்ந்த தமிழ்நாடு பெயர் மாற்றத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. 1968 ஜனவரி 23-ஆம் நாள் ஆட்சி மொழி மசோதா நிறைவேற்றப்பட்டது. தமிழ் நாட்டில் இந்தி ஒழிக்கப்பட்டு இருமொழித் திட்டம் கொண்டுவரப்பட்டது.

''துணை சபாநாயகராக இந்த மன்றத்தைச் சரிவர பெருமையாக நடத்தினீர்கள். எதிர்க்கட்சிக்காரர்களாகிய நாங்கள் சற்று துடுக்குத்தனமானவர்களாக இருந்த போதிலும் எங்களுக்குக் கொடுக்க வேண்டிய விளக்கங்களைக் கொடுத்தீர்கள். பொதுவாக எங்களைத் திருப்திப் படுத்தும் வகையில் நடத்தினீர்கள். அதற்காக நன்றி செலுத்துகிறோம்'

என்று காங்கிரஸ் கட்சியின் கொறடாவாக இருந்த திரு. கே. வினாயகம் அளித்த பாராட்டு, சட்ட மன்றப் பேரவைத் துணைத் தலைவராகப் புலவர் அவர்கள் ஆற்றிய பணிக்குச் சான்றாக அமைந்தது.

## சட்டமன்றப் பேரவைத் தலைவர்

சட்டமன்றப் பேரவைத் துணைத் தலைவராகவும், திரு.ஆதித்தனார் பதவி விலகியபின்,பேரவைத் தலைவர் பொறுப்பிலும் சிறப்பாக பணியாற்றி வந்த புலவர் அவர்களை, முறைப்படி பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கவேண்டும்என்று அண்ணா அவர்கள் விரும்பினார். அண்ணா அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், முதலமைச்சர் கலைஞர் அவர்கள், புலவர் அவர்களையே பேரவைத் தலைவராக அமர்த்த முடிவு செய்தார், 1969, பிப்ரவரி 22-ஆம் நாள், புலவர் அவர்கள் ஒரு மனதாக சட்ட மன்றப் பேரவைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

''தமிழக சட்ட மன்ற வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தாங்கள் தொடங்கியிருக்கிறீர்கள். தமிழ் நாடு சட்டமன்ற வரலாற்றில் பேரவைத் தலைவராக, ஒரு புலவர் இடம் பெறுவது இதுதான் முதல் முறையாகும். இலக்கியப் பெருமை வாய்ந்த மன்னர்களால் புகழப்பட்ட புலமை தமிழ் நாட்டின் அரியணையில் ஏற்றப்பட்டு புகழப்படுகிறது'' என்று முதல்வர் கலைஞர் அவர்கள் பாராட்டினார்.

சட்டப்பேரவைத் தலைவராகப் பொறுப்பேற்ற புலவர் அவர்கள், சட்டமன்றத்திலே கடமை கண்ணியம், கட்டுப்பாடு காத்து, எடுத்தேன், கவிழ்த்தேன் என்று பேசாமல், சட்டமன்றத்தின் மரபுகளைக் காத்தார். விவாதங்களில், பேச்சுக்களில்

சூடு மிகும் போதெல்லாம் புலவர் அவர்கள் தமக்கே உரிய பொறுமையினால் குளிர்வித்து, எல்லோரையும் அன்பில் அரவணைத்து தமிழகச் சட்டமன்ற நடவடிக்கை, பிற மாநிலங்களுக்கு வழிகாட்டியாக விளங்கிய வகையில் நடத்திச் சென்றார்.

### வெளிநாடு பயணம்

1969, செப்டம்பர் 7-ஆம் நாள் இலங்கை திரிகோணமலை நகர மன்றம் நடத்திய வள்ளுவர் ஈராயிரமாண்டு நிறைவு விழாவில் பங்குகொள்ள இலங்கை சென்றார். 1969, அக்டோபர் திங்களில் இங்கிலாந்து அரசின் அழைப்பை ஏற்று, இங்கிலாந்து சென்றார். மேற்கு இந்தியத் தீவுகளை ஒட்டிய போர்ட் ஆஃப் ஸ்பெயின் சென்றார். டிரினிடாடில் நடைபெற்ற 15வது காமன்வெல்த் நாடாளுமன்ற மாநாட்டிற்குத் தமிழ் நாட்டுக் காமன் வெல்த் நாடாளுமன்றச் சங்கச் சார்பில் சென்று வந்தார். 1969, நவம்பரில் பாரிஸ், ஜெனிவா, ஜூரிச், நியூயார்க், டொரென்டோ வாஷிங்டன், டோக்கியோ, கோலாலம்பூர், சிங்கப்பூர் போன்ற பகுதிகளில் பயணம் மேற்கொண்டார்.

### 1971-ஆம் ஆண்டுத் தேர்தல்

1969க்குப் பின் இந்திய தேசியக் காங்கிரசில் ஏற்பட்ட பிளவு, இந்திய அரசியலில் பெரும் மாறுதல்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக 1972-ஆம் ஆண்டு நடத்தப்பட வேண்டிய பொதுத் தேர்தலை, ஓராண்டுக்கு முன்பே நடத்த மத்திய அரசும், தமிழக அரசும் முடிவு செய்தன. அதையடுத்து தமிழ் நாடு சட்ட மன்றத்துக்கான தேர்தல் 1971, மார்ச் 7-ஆம் நாள் நடைபெற்றது. மூன்றாம் முறையாகச் செய்யாறு தொகுதி மக்கள் புலவர் அவர்களை

வெற்றி பெற வைத்தனர். ஆனால் தி.மு. கழகத்தில் ஏற்பட்ட இக்கட்டான நிலையைச் சமாளிக்க முதல்வர் கலைஞர் அவர்கள், திரு.கே.ஏ. மதியழகன் அவர்களைப் பேரவைத் தலைவராக ஆக்க வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார். கழகத்தில் எழுந்த சிக்கலைத் தீர்க்க, புலவர் அவர்கள் விட்டுக் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

**மீண்டும் சட்டமன்றப் பேரவைத் தலைவர்**

1972, அக்டோபர்த் திங்களில், கழகத்திலிருந்து விலக்கப்பட்ட எம்.ஜி.ஆர். தனிக்கட்சி தொடங்கியதை அடுத்து, பேரவைத் தலைவராக இருந்த, திரு. மதியழகன் அவர்கள் தி.மு.கழகத்திற்கு எதிராகச் செயல்பட ஆரம்பித்தார். அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு பதவியிலிருந்து இறக்கப்பட்டார். அன்றைய சூழ்நிலையில், நம்பிக்கைக்குரியவரும், பொறுப்புடனும் நிதானத்துடனும் செயல்படக்கூடிய திறன் உடையவருமான புலவர் அவர்களையே மீண்டும் பேரவைத் தலைவராக்க, முதல்வர் கலைஞர் முடிவு செய்தார். 1973, ஆகஸ்டு 2-ஆம் நாள் மீண்டும் சட்டமன்றப் பேரவைத் தலைவராகப் புலவர் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்தப் பொறுப்பில் தொடர்ந்து 1977 ஜூலை 2 வரை நீடித்தார்.

இரண்டாம் முறையாகச் சட்டப் பேரவைத் தலைவராகப் புலவர் அவர்கள் கடமை ஆற்றிய காலம் மிகவும் சிக்கல் மேலோங்கிய காலம். காழ்ப்பும், குரோதமும் விஞ்சி நின்ற காலம். எம்.ஜி.ஆர். அவர்களுடைய அரசியல் பிரவேசம் எப்படியாவது தி.மு. கழகத்தைப் பதவியிலிருந்து இறக்கிவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு. சட்ட

வெற்றி பெற வைத்தனர். ஆனால் தி.மு. கழகத்தில் ஏற்பட்ட இக்கட்டான நிலையைச் சமாளிக்க முதல்வர் கலைஞர் அவர்கள், திரு.கே.ஏ. மதியழகன் அவர்களைப் பேரவைத் தலைவராக ஆக்க வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார். கழகத்தில் எழுந்த சிக்கலைத் தீர்க்க, புலவர் அவர்கள் விட்டுக் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

**மீண்டும் சட்டமன்றப் பேரவைத் தலைவர்**

1972, அக்டோபர்த் திங்களில், கழகத்திலிருந்து விலக்கப்பட்ட எம்.ஜி.ஆர். தனிக்கட்சி தொடங்கியதை அடுத்து, பேரவைத் தலைவராக இருந்த, திரு. மதியழகன் அவர்கள் தி.மு.கழகத்திற்கு எதிராகச் செயல்பட ஆரம்பித்தார். அவர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு பதவியிலிருந்து இறக்கப்பட்டார். அன்றைய சூழ்நிலையில், நம்பிக்கைக்குரியவரும், பொறுப்புடனும் நிதானத்துடனும் செயல்படக்கூடிய திறன் உடையவருமான புலவர் அவர்களையே மீண்டும் பேரவைத் தலைவராக்க, முதல்வர் கலைஞர் முடிவு செய்தார். 1973, ஆகஸ்டு 2-ஆம் நாள் மீண்டும் சட்டமன்றப் பேரவைத் தலைவராகப் புலவர் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்தப் பொறுப்பில் தொடர்ந்து 1977 ஜூலை 2 வரை நீடித்தார்.

இரண்டாம் முறையாகச் சட்டப் பேரவைத் தலைவராகப் புலவர் அவர்கள் கடமை ஆற்றிய காலம் மிகவும் சிக்கல் மேலோங்கிய காலம். காழ்ப்பும், குரோதமும் விஞ்சி நின்ற காலம். எம்.ஜி.ஆர். அவர்களுடைய அரசியல் பிரவேசம் எப்படியாவது தி.மு. கழகத்தைப் பதவியிலிருந்து இறக்கிவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு, சட்ட

மன்றத்தில் செயல்பட்டது. அதற்குச் சபாநாயகர் இடங்கொடுக்க மறுத்த நிலையில், கோபம் பூராவும் அவர் மீது திருப்பி விடப்பட்டது. அப்படிப்பட்ட கொந்தளிப்பான சூழ்நிலையிலும், நிதானம் தவறாமல், கட்சிக் கண்ணோட்டம் பாராமல், புலவர் அவர்கள் கடமையாற்றினார்.

## மணிவிழா

1975-ஆம் ஆண்டு ஏப்ரல் 15ஆம் நாள் புலவர் அவர்களுடைய மணிவிழா, சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. "இனிய இயல்பும், எளிய வாழ்வும், எழிலார்ந்த தமிழும் கொண்டு, தமிழ்ச்சமுதாயப் பெருங்குடி மக்களுடைய உள்ளத்திலெல்லாம் நல்லிடத்தைப் பெற்றிருக்கிற சட்டப்பேரவைத் தலைவர் புலவர் அவர்கள் 60-ஆம் ஆண்டினை இன்றைய தினம் தொடங்கியிருப்பதைக் கண்டு, மகிழ்ச்சி அடைவதோடு அவர் பல்லாண்டு வாழ வேண்டுமென்று, தமிழக மக்கள் சார்பாகவும், இந்த அவையின் சார்பாகவும் என்னுடைய வாழ்த்தினைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

அவருடைய பிறந்த மண்ணில், திருவத்திபுரம் பேரூராட்சி மன்றத்தின் சார்பில், மணிவிழா சிறப்பாக நடத்தப்பட்டது. பாராளுமன்ற சபாநாயகர் திரு. தில்லான், தமிழக ஆளுநர் கே. கே. ஷா, தமிழறிஞர்கள், அனைத்துக் கட்சித் தலைவர்கள் பங்கேற்றனர்.

கலைக்கப்பட்ட தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவர்

1975-ஆம் ஆண்டு ஜூன் திங்களில் இந்தியாவில் நெருக்கடிநிலை அமுல் செய்யப்பட்டது. எதிர்க் கட்சித் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். அடிப்படை உரிமைகள், பத்திரிகை சுதந்திரம் போன்றவை பறிக்கப்பட்டன. அவசர நிலையை எதிர்த்து, தமிழக அரசு குரல் கொடுத்தது. சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன் விளைவாக 1976, ஜனவரி 31-ஆம் நாள், தமிழக அரசு பதவி விலக்கப்பட்டது. தமிழ்நாடு சட்டமன்றம் கலைக்கப் பட்டது. முதன் முறையாகத் தமிழகத்தின் மீது குடியரசுத் தலைவர் ஆட்சி திணிக்கப்பட்டது.

சட்டமன்றம் கலைக்கப்பட்டாலும், அடுத்த சட்டமன்றம் கூட்டப்படும் காலம் வரை, பேரவைத் தலைவர் பதவி நீடிக்கும் என்ற அரசியல் சாசனத்து விதியைக் கருத்தில் கொண்டும், கழகத் தலைமையின் கட்டளையை ஏற்றும், புலவர் அவர்கள் தொடர்ந்து, கலைக்கப்பட்ட தமிழ்நாடு சட்டமன்றத்தின் பேர வைத் தலைவராக நீடித்தார்.

மிசா கால வேதனைகள், சோதனைகள்

ஆட்சி கலைக்கப்பட்ட அந்த நாளிலேயே கழகத்தை ஒழிக்கும் முயற்சியில் மத்திய அரசு ஈடுபட்டது. ஆயிரக்கணக்கான தோழர்கள் மிசா கைதிகளாக்கப்பட்டு கொடுமைப்படுத்தப்பட்டனர். நெருக்கடி காலத்து நெருப்புச்சூட்டில் கழகம் வாட்டப்பட்ட அன்று, கலைஞர் அவர்களைச் சந்திப் பவர்களெல்லாம் சிறைக்கு அனுப்பப்பட்ட நேரத் திலும் கலைஞரை அடிக்கடி சந்தித்து ஆறுதல் கூறி வந்தார் புலவர். அதுவரை புலவர் அவர்களை விட்டு

வைத்த நெருக்கடி கால அரசு இதற்குப் பின் புலவர் அவர்களை நெருக்கத் தொடங்கியது. அவர்மீது குற்றங்காண மத்திய புலனாய்வுத்துறை அதிகாரிகள் செய்யாறு நகரில் முகாமிட்டனர். 1977-ஆம் ஆண்டு, ஜனவரி 5-ஆம் நாள், புலவர் அவர்கள் சட்டமன்றப் பேரவைத் தலைவராக இருந்தபோதே செய்யாறு நகரிலும், சென்னையிலும் இருந்த அவருடைய இல்லங்கள், அவருடைய நண்பர்கள், உறவினர்கள் இல்லங்கள் ஆகியவற்றில் புலனாய்வுத்துறை அதிகாரிகள் சோதனை நடத்தினர்.

### 1977-ஆம் ஆண்டுத் தேர்தல்

இந்தியாவில் இருந்த நெருக்கடி நிலை 1977-ஆம் ஆண்டு நீக்கப்பட்டது. அடுத்து நடந்த பாராளுமன்றத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் படுதோல்வியடைந்தது. ஜனதா ஆட்சி உருவானது. அதே ஆண்டு மே திங்களில் தமிழக சட்ட மன்றத்திற்கான தேர்தல் நடந்தது. நான்காவது முறையாக, செய்யாறு தொகுதி மக்கள் புலவர் அவர்களை வெற்றி பெற வைத்தனர். ஆனால் தமிழக அளவில் தி.மு.க கழகம் வெற்றி வாய்ப்பையிழந்தது. அ.இ.அ.தி.மு. கழகம் ஆட்சியைக் கைப்பற்றியது.

### மீண்டும் எதிர்கட்சி சட்டமன்ற உறுப்பினர்

1962-ஆம் ஆண்டு எதிர்க்கட்சி உறுப்பினராகத் தன் சட்டமன்றப் பணியைத் துவக்கிய புலவர் அவர்கள், மீண்டும் 1977-ஆம் ஆண்டு முதல், அதுவரை தாம் பேரவைத் தலைவராகக் கடமையாற்றிய அதே சட்டமன்றத்தில், எதிர்க்கட்சி உறுப்பினராகப் பணியாற்றத் தொடங்கினார். பத்தாண்டு கால இடைவெளி, 1962-67 காலத்தில் எதிர்க்கட்சியில் இருந்த

போது விவாதங்களில் அவர் காட்டிய வேகத்தை எந்த வகையிலும் தணித்து விடவில்லை என்பது மீண்டும் அவர் எதிர்க்கட்சி உறுப்பினராக ஆற்றிய உரைகளில் புலப்பட்டது. அவர் ஆற்றிய உரைகள் ஆளுங்கட்சியின் பார்வையையும், முதல்வர் எம்.ஜி.ஆர். அவர்களின் தனிக் கவனத்தையும் புலவர் அவர்கள்பால் திருப்பின.

### அவதூறு வழக்கு

சட்ட மன்றத்தில் புலவர் அவர்களின் பேச்சு எம்.ஜி.ஆர். அவர்களுக்கு எரிச்சலையும் கோபத்தையும் உண்டாக்கியது. அதன் விளைவாக 1977, ஜூலை 26ம் நாள், புலவர் அவர்கள் கைது செய்யப்பட்டார். இந்திய குற்றவியல் சட்டத்தின் 9 பிரிவுகளின் கீழ் அவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. எம்.ஜி.ஆர். அரசு அமைக்கப்பட்டபின் தி.மு.கழக முன்னணியினர் மீது போடப்பட்ட முதல் வழக்கு அது.

### தி.மு.கழக தலைமைக் கழகப் பொறுப்பாளர் புலவர்

977-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில், தமிழகத்திற்கு வந்த இந்திரா காந்திக்குக் கறுப்புக் கொடி காட்ட தி.மு.கழகம் முடிவெடுத்தது. அதையொட்டிக் கழகத் தலைவர் அவர்களும், கழக முன்னணியினரும் கைது செய்யப்பட்டனர். அவர்கள் மீது சதி வழக்கு போடப்பட்டது. அந்த நிலையில் கழகத்தின் செயல்பாடுகளை முன்னின்று நடத்த, கழகத்தின் முன்னோடிகளில் ஒருவரான புலவர் அவர்கள் தி.மு. கழகத் தலைமைக் கழகப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார்.

பொய் வழக்குகளைத் திரும்பப் பெற வற்புறுத்தியும், தமிழினத் தலைவர்களை விடுதலை செய்யக்

கோரியும், அடக்குமுறைகளைக் கண்டித்தும், தலைமைக் கழகப் பொறுப்பாளர் புலவர் அவர்கள் தலைமையில் கருஞ்சட்டையணிந்த கழகத் தோழர்களின் கண்டனப் பேரணி சென்னை நகரில் நடைபெற்றது. புலவர் அவர்களும், முரசொலி மாறன் அவர்களும் அன்றைய ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி அவர்களைச் சந்தித்துக் கோரிக்கை மனு கொடுத்தனர்.

தமிழகத்திற்கு வருகைதந்த அன்றைய குடியரசுத் தலைவர் நீலம் சஞ்சீவ ரெட்டி அவர்களைத் தலைமைக் கழகப் பொறுப்பாளர் புலவர் அவர்கள் தலைமையில் தி.மு.கழகக் குழுவொன்று சந்தித்து, தமிழினத் தலைவர்களை விடுவிக்கக்கோரி விண்ணப்பம் கொடுத்தனர்.

1977-ஆம் ஆண்டு நவம்பர் திங்களில் கடும் புயற்காற்று தமிழகத்தைத் தாக்கியது. சிறையில் அடைபட்டிருந்த கழகத் தலைவர் அவர்கள், கழகத்தின் சார்பில் புயல் நிவாரண நிதியாக, 25,000 ரூபாயை அளிக்க புலவர் அவர்களிடம் சொன்னார். புலவர் அவர்களும் மற்ற தி.மு.கழகச் சட்டமன்ற உறுப்பினர்களும் தலைமைச் செயலகம் சென்று, நிதியளிக்க முனைந்த போது தலைமைச் செயலர் அதை ஏற்க மறுத்தார். பிறகு ஆளுநர் அவர்களுடைய செயலரிடம் நிதியளித்தனர்.

கழகத் தலைவர் அவர்களின் வேண்டுதலை ஏற்றுப் புலவர் அவர்களும், மன்னை அவர்களும் புயல்-வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் பயணம் செய்து ஆறுதல் கூறினர். நிவாரணப் பணிகளில் கழகத் தோழர்களை ஈடுபடச் செய்தனர். ஆளுநர் கூட்டிய வெள்ள நிவாரண ஆலோசனைக் கூட்டத்திலும், பிறகு சட்டமன்றத்தில் வைக்கப்பட்ட

வெள்ளையறிக்கை மீதும் புலவர் அவர்கள் பேசும் போது நிவாரணப் பணியில் அரசு காட்டிய அலட்சியத்தைச் சுட்டிக் காட்டினார்.

## இந்தி எதிர்ப்பு மாநாட்டுத் தலைமை

1978 ஆம் ஆண்டு, டிசம்பர் 23, 24 தேதிகளில் திருச்சி நகரில் தி.மு.கழக இந்தி எதிர்ப்பு மாநாட்டு கூட்டப்பட்டது. மாநாட்டிற்குப் புலவர் அவர்கள் தலைமையேற்றார். திரு. வை. கோபாலசாமி அவர்கள் திறந்து வைத்தார். புலவர் அவர்கள் தலைமையுரையில், "போராட்டக் களம் நமக்குப் புதிதல்ல. இந்தி ஆதிக்கத்தை முறியடிக்க எந்தத் தியாகத்தையும் ஏற்கத் தயார். இந்தி எதிர்ப்பு போராட்டத்துக்குத் தலைமை தாங்கத் தயார்" என்று முழக்கமிட்டார்.

## சட்டமன்றத்தில் இந்தி எதிர்ப்பு முழக்கம்

தி.மு.கழகத்தின் இந்தி எதிர்ப்பு திட்டத்தைக் கிண்டல் செய்து வந்த ஆளுங்கட்சியின் இரட்டை வேடத்தை சட்டமன்றத்தில் புலவர் அம்பலப்படுத்தினார். இந்தி மொழி பற்றிப் பொது மக்கள் வாக்கெடுப்பு நடத்த வேண்டும் என்று அ.தி.மு.க. தீர்மானம் நிறைவேற்றியதைச் சுட்டிக் காட்டி இதுதான் அண்ணாவின் வழியா? என்று கேட்டார்.

## 1980-ஆம் ஆண்டுத் தேர்தல்

1977-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட ஜனதா அரசு, தலைவர்களுக்கிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளினால் வீழ்ச்சியுற்றது. 1980-ஆம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் இந்திரா காங்

கிரசும் தி.மு. கழகமும் கூட்டணியமைத்துப் போட்டியிட்டன. பெரும் வெற்றி பெற்றன. மத்தியில் இந்திரா காங்கிரஸ் அரசு உருவானதையடுத்து, தமிழகத்தில் அ.இ.அ.தி.மு.க. ஆட்சி கலைக்கப் பட்டது. தமிழகத்தில் சட்டமன்றத்திற்கான தேர்தலில் 1980, மே மாதம் நடைபெற்றது. இந்தத் தேர்தலில் செய்யாறு தொகுதியில் புலவர் அவர்கள் போட்டியிடவில்லை. பாபு ஜனார்த்தனம் அவர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்பதற்காகத் தாமே விலகிக் கொண்டார். செய்யாறு தொகுதியில் ஐந்தாம் முறையாகத் தொடர்ந்து தி.மு.கழகம். வெற்றி பெற்றது. புலவர் அவர்கள் தொகுதிக்கு ஆற்றிய பணிகளுக்குச் செய்யாறு மக்கள் காட்டிய நன்றி அது. ஆனால் தி.மு கழகம் தமிழக அளவில் வெற்றி வாய்ப்பை இழந்தது.

புலவர் அவர்கள் தொடர்ந்து இயக்கப் பணியிலும் பொதுப் பணியிலும் ஈடுபட்டு வந்தார். கழகத் தலைவர் அவர்களின் பிறந்த நாள் விழாக்களிலும், மற்ற கழக நிகழ்ச்சிகளிலும் பங்கு கொண்டார். செங்கற்பட்டு மாவட்ட தி.மு.கழக மாநாட்டில் பங்கு கொண்டு பேரறிஞர் அண்ணா அவர்கள் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். "அண்ணாவின் முகத்துக்கு அரிதாரம் பூசியது இந்தக் கை. அவர் கட்டிக் கொள்ள வேண்டிய காவி ஆடையைத் துவைத்துக் கொடுத்ததும் இந்தக் கைதான்" என்று அண்ணா அவர்களோடு தமக்கிருந்த தொடர்பை நினைவு கூர்ந்தார்.

1984-ஆம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் அரக்கோணம் பாராளுமன்ற தி.மு.கழக வேட்பாளராக புலவர் அவர்கள் கழகக் கட்டளையை யேற்றுப் போட்டியிட்டார். அனுதாப அலை இந்தியா முழு

யும் பாதித்தது. அனைத்திந்திய மட்டத்தில் காங் காங்கிரஸ் கூட்டணியே வெற்றி பெற்றது.

1985 டிசம்பரில் செய்யாறு தொகுதியில் நடை பெற்ற இடைத் தேர்தலில் கழக வேட்பாளரின் வெற்றிக்காக அரும்பாடுபட்ட புலவர் அவர்கள் ஆளுங்கட்சியின் அராஜகத்திற்குக் கண்டனம் தெரி விக்க உண்ணாவிரதம் இருந்தார். அந்த இடைத் தேர்தலில் வெற்றி பெற்ற அ.இ.அ தி.மு கழக அரசு அந்த வெற்றி தந்த தெம்பில் பல ஆண்டுகளாக நடத்தாமல் தள்ளிப் போடப்பட்டு வந்த ஊராட்சி மன்ற, நகராட்சி மன்றத் தேர்தல்களை நடத்தும் துணிச்சல் பெற்றது.

தமிழகமெங்கும் நடைபெற்ற உள்ளாட்சி மன்றத் தேர்தல்களில் தி.மு.கழகம் பெரு வெற்றி பெற்ற பெரும்பான்மை நகராட்சி மன்றங்களைக் கைப் பற்றியது. திருவத்திபுரம் நகராட்சி மன்றத்தையும் கழகம் கைப்பற்றியது. திரு. பி. கே. இராமசாமி நகராட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### அவதூறு வழக்கில் புலவர் விடுதலை

1977-ஆம் ஆண்டு ஜூலை 26-ஆம் நாள் புலவர் அவர்களைக் கைது செய்து எம்.ஜி.ஆர். அரசு போட்ட அவதூறு வழக்கு சென்னைப் பெருநகர 3ஆவது மாஜிஸ்ட்ரேட் நீதிமன்றத்தில் நான்கு ஆண்டு களுக்கு மேலாக நடந்தது. அரசுத் தரப்பில் 84 சாட்சியங்கள் விசாரிக்கப்பட்டன. 765 ஆவணங்கள் தாக்கல் செய்யப்பட்டன. 1981-ஆம் ஆண்டு அக்டோபர் 28-ஆம் நாள் தீர்ப்பு கூறப்பட்டது. வழக்கை விசாரித்த சென்னைப் பெருநகர 3-ஆவது நீதிபதி நடராசன் அவர்கள் எல்லாக் குற்றச்சாட்டு

களிலிருந்தும் புலவர் அவர்களை விடுதலை செய்வ தாகத் தீர்ப்பளித்தார்.

தீர்ப்பை ஏற்க மனமில்லாத எம்.ஜி.ஆர். அரசு 1981, டிசம்பர் 22-ஆம் நாள் சென்னை உயர்நீதி மன்றத்தில், தீர்ப்புக்கு எதிராக மேல் முறையீடு செய்தது. உயர்நீதி மன்றத்தில் 1985 பிப்ரவரி 26-ஆம் நாளோடு விசாரணை முடிந்தது என்றாலும், தீர்ப்பு வழங்கப்படாமலேயே இருந்து வந்தது. இந்த நிலை ஓராண்டுக்கும் மேலாக நீடித்தது. இறுதியில் 1986-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் நாள் தீர்ப்பு வழங்கப்பட்டது. சென்னை உயர்நீதி மன்றத்தில் அரசு தரப்பின் மேல் முறையீட்டை விசாரணை செய்த நீதிபதி கே. எம். நடராசன் அவர்கள் "புலவர் கோவிந்தன் அண்ணா அருளகத்திற்கெனத் திரட்டிய நிதியை, நேர்மையற்ற முறையில் தன் சொந்த உபயோகத்திற்காக மோசடி செய்தார் என்று கூற எந்தவித ஆதாரமும் இல்லை" என்று தீர்ப்பளித்தார்.

### 1986-87 இந்தி எதிர்ப்புப் போராட்டம்

இந்தி ஏகாதிபத்தியத்தையும் இந்தித் திணிப்பையும் எதிர்க்க மீண்டுமொரு போராட்டத்தில் தி.மு. கழகம் ஈடுபட்டது. 1986-ஆம் ஆண்டு நவம்பர் 8-ஆம் நாள் கோவையில் கூட்டப்பட்ட இந்தி எதிர்ப்பு மாநாட்டில் 1963-ஆம் ஆண்டு, இந்தித் திணிப்பை எதிர்க்க அறிஞர் அண்ணா அவர்கள் வகுத்த போராட்ட நெறியிலேயே, அரசியல் சட்டத்தின் மொழிப் பிரிவான, 17-ஆவது பிரிவை எரியூட்டும் போராட்டத்தை, அண்ணா அவர்கள் போராட்டத்தில் ஈடுபட்ட அதே நவம்பர் 17-ஆம் நாள் முதல் தொடங்குவது எனத் திட்டமிடப்பட்டது. 1986

டிசம்பர் 5-ஆம் நாள், செய்யாறு நகரில் புலவர் அவர்கள் தலைமையில் மொழிப் பிரிவு எரிப்புப் போராட்டம் நடைபெறும் என்றும் அறிவிக்கப் பட்டது.

மொழிப் போரில் புலவர்

1978-ஆம் ஆண்டு திருச்சி இந்தி எதிர்ப்பு மாநாட்டுக்குத் தலைமை தாங்கிய புலவர் அவர்கள், தாம் 1938 லிருந்து தொடர்ந்து இந்தி எதிர்ப்புப் போராட்டங்களில் ஈடுபட்டிருந்த போதிலும் மொழிப் போரில் நீண்ட நாள் சிறை செல்லும் வாய்ப்பு தனக்குக் கிடைக்கவில்லை என்ற மனக் குறையையும், அடுத்த இந்திப் போராட்டத்துக்குத் தலைமை ஏற்கும் பொறுப்பைத் தமக்கு தர வேண்டும் என்ற விருப்பத்தையும், தம் தலைமை யுரையில் வெளியிட்டிருந்தார்.

அந்த வாய்ப்பு அவருக்கு 1986-ஆம் ஆண்டு, தி மு. கழகம் மேற்கொண்ட இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போராட்டத்தின் போதுதான் கிடைத்தது. 1986 டிசம்பர் 5-ஆம் நாள் மாலை, செய்யாறு நகரில் அண்ணாசிலையருகே, புலவர் அவர்கள், 'தேவநாகரி எழுத்தில் உள்ள இந்தி மொழி மட்டும் இந்தியாவின் ஆட்சி மொழி' என்ற வாசகம் எழுதிய தாளுக்குத் தீயிட்டு எரித்தார். அவரைத் தொடர்ந்து நூற்றுக்கும் அதிகமான வீரர்கள் இந்தி எரிப்புப் போரில் பங்கு கொண்டனர். புலவர் அவர்களும் மற்ற போராட்ட வீரர்களும் கைது செய்யப் பட்டனர். செய்யாறு மாஜிஸ்ட்ரேட் முன் வழக்கு பதிவு செய்யப்பட்டது. பிறகு அவர்கள் வேலூர் சிறையில் அடைக்கப்பட்டனர்.

பதினைந்து நாள் காவலில் இருந்தபின் டிசம்பர் 19-ஆம் நாள் மீண்டும் செய்யாறு நீதி மன்றத்திற்கு அழைத்து வரப்பட்ட புலவர் அவர்களிடம் குற்றப் பத்திரிகை கொடுக்கப்பட்டது. வழக்கு தொடர்ந்து நடந்தது.

1987, ஜனவரி 8-ஆம் நாள் வழக்கிற்கென வேலூர் சிறையிலிருந்து, செய்யாறு வழக்கு மன்றம் கொண்டு வரப்பட்ட புலவர் அவர்களுக்கு, வழக்கு விசாரணையின்போது மயக்கம் ஏற்பட்டது. வழக்கு விசாரணையைக் காணச் சென்னையிலிருந்து வந்திருந்த அவருடைய தம்பி டாக்டர் நடராசன் அவர்களும், செய்யாறு அரசு மருத்துவமனை டாக்டரும் உடனடியாக அவருக்குச் சிகிச்சையளித்தனர். அரசு மருத்துவமனை டாக்டர் "புலவர் அவர்களுக்கு இதயத் துடிப்பு அதிகமாக உள்ளது. இந்த நிலையில் அவரை வேலூர் கொண்டு செல்வது ஆபத்து" என்று எச்சரித்தார்.

உடனே மாஜிஸ்ட்ரேட் அவர்கள், 'உங்களை ஜாமீனில் விடுதலை செய்து விடுகிறேன். சிகிச்சை பெற்று ஓய்வெடுங்கள். வழக்கு விசாரணை நடக்கும் போது மட்டும் வந்தால் போதும்" என்று புலவர் அவர்களை வேண்டிக் கொண்டார்.

ஆனால், புலவர் அவர்கள் ஜாமீனில் போக மறுத்து விட்டார். "நான் உயிரைத் துச்சமென மதித்து இம்மொழிப் போரில் ஈடுபட்டுள்ளேன். எனவே உயிரைப் பற்றிக் கவலையில்லை. நான் சொந்த ஜாமீனில் போக மாட்டேன்" என்று மறுத்து விட்டார்.

வேறு வழியில்லாத நிலையில் அவரைப் போலீஸ் காவலுடன் செய்யாறு மருத்துவமனையிலேயே

சேர்க்க மாஜிஸ்ட்ரேட் ஆணையிட்டார். இரவு முழுவதும் செய்யாறு மருத்துவமனையில் மருத்துவர் கண்காணிப்பில் இருந்த புலவர் அவர்கள், மறுநாள் தீவிர சிகிச்சைக்கென வேலூர் மருத்துவ மனைக்குக் கொண்டு செல்லப்பட்டார்.

வழக்கு விசாரணை முடிந்து 13-1-1987 அன்று புலவர் அவர்களுக்கு 3 வாரச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஏற்கனவே 39 நாட்கள் சிறையில் இருந்து விட்டமையால் விடுதலை செய்யப்பட்டார்.

### செல்லுபடியாகாத சட்ட மன்றம்

மொழிப் போரில் களம் புகுந்து சிறைப் பட்டிருந்த புலவர், அந்தமொழிப் போரைத் தொடர்ந்து தமிழக சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தைப் பற்றியும், அதனால் கழக சட்டமன்ற உறுப்பினர்கள்' பத்துபேர் பதவி பறிக்கப்பட்ட கொடுமையையும் பற்றி சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். சட்டமன்றத்தின் அவசரக் கூட்டமும், அதில் நிறைவேற்றப்பட்ட அவசரத் தீர்மானமும் எந்த அளவு பாராளுமன்ற நெறிமுறைகளுக்கு முரணானவை என்பதை விளக்கி 'அவசரக் கூட்டமும் சட்டமன்றத் தீர்மானமும்' என்ற தலைப்பில் கட்டுரை வடிவில் மக்கள் மன்றத்தின் தீர்ப்புக்கு வைத்தார்.

இப்படி மொழிப் போரில் ஈடுபட்டனர் என்ற காரணத்தால் கழக சட்டமன்ற உறுப்பினர்களின் உரிமையைப் பறித்த அ.தி.மு. கழக அரசும், கட்சியும் 1965 மொழிப் போரில் உயிர்த் தியாகம் செய்த மொழிப்போர் வீரர்களின் நினைவாக வீர வணக்கம் செலுத்த முயற்சிப்பது கண்டு 'நாடகமாடிகளின் வீர வணக்கம்' என்ற தலைப்பில் கட்டுரை

யொன்றை எழுதி அவர்களின் இரட்டை வேடத்தை அம்பலப்படுத்தினார்.

### மார்ச் 15 – முழு அடைப்பு:

எம்.ஜி.ஆர். மறைவுக்குப் பின் அ.தி.மு. கழகத்தில் ஏற்பட்ட பிளவின் விளைவாக, தமிழகத்தில் மீண்டும் குடியரசுத் தலைவர் ஆட்சி ஏற்பட்டது. அந்த நிலையில் 1988 ஆம் ஆண்டு, மார்ச் 15 ஆம் நாள் இந்தியாவிலிருந்த எதிர்க் கட்சிகள் அனைத்தும் இணைந்து ராஜிவ் காந்தியின் ஊழல் ஆட்சிக் கெதிராக கண்டனம் தெரிவிக்க ஒரு நாள் முழு அடைப்பு நடத்த அழைப்பு விடுத்தன.

அந்த முழு அடைப்பைத் தோல்வியுறச் செய்ய அரசு அடக்குமுறையில் ஈடுபட்டது. தமிழ் நாட்டில் ஆயிரக்கணக்கான எதிர்க் கட்சித் தோழர்கள் சமூக விரோதிகள் என்ற பெயராலும், முன்னெச்சரிக்கை நடவடிக்கை என்ற பெயராலும் கைது செய்யப் பட்டனர். செய்யாறு நகரில் புலவர் அவர்களும் மற்ற தோழர்களும் மார்ச் 14 ஆம் நாள் கைது செய்யப்பட்டனர்.

முன்னெச்சரிக்கை நடவடிக்கை என்ற பெயரால் சமூக விரோதிகள்தான் கைது செய்யப்படுவார்கள். ஓர் அரசியல் சட்ட நிர்வாகியாக இருந்த முன்னாள் சபாநாயகர் ஒருவரை அதுபோலக் கைது செய்ய லாமா? என்ற கண்டனம் எழுந்தது. தன்னுடைய தவறை உணர்ந்த ஆளுநர் அரசு உடனடியாக புலவர் அவர்களை விடுதலை செய்தது.

### மீண்டும் கழக ஆட்சி

1989ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் தமிழக சட்ட மன்றத் தேர்தல் நடைபெற்றது. 13 ஆண்டு

கால இடைவெளிக்குப் பின் மீண்டும் கழக ஆட்சி மலர்ந்தது. கலைஞர், தமிழக முதல்வரானார். இந்த வெற்றியைக் கண்டு மனம் பொறாத காங்கிரஸ் கட்சியும் அதற்குத் துணையாகச் செயல்பட்டு வரும் அண்ணா தி.மு.கழகத்தின் ஒருபிரிவினரும் திட்ட மிட்ட வன்முறையில் ஈடுபட்டனர்.

1989, மார்ச் 25ஆம் நாள், சட்ட மன்றத்தில், தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள், கழக அரசின் முதல் நிதி நிலை அறிக்கை படிக்க எழுந்தபோது வன்முறையில் ஈடுபட்டனர். கலைஞர் அவர் களையே தாக்க முயன்றனர். அதுவரை அமைதி காத்திருந்த கழக சட்டமன்ற உறுப்பினர்கள் பொங்கி எழுந்தனர். பதினைந்து நிமிடம் சட்ட மன்றத்தில் அமளி. கலைஞர் தாக்கப்பட்ட செய்தி யறிந்து புலவர் அவர்கள் அதிர்ச்சியடைந்தார். சட்ட மன்றத்தின் மரபுகள் கேவலப் படுத்தப்பட்ட தைக் கண்டு மனவேதனையடைந்தார். சட்டமன்ற நெறிமுறைகளை எடுத்துக் காட்டி, அடுக்கடுக்காக முன்னுதாரணங்களைச் சுட்டிக்காட்டி, காங்கிரஸ்—அ. தி. மு. க. உறுப்பினர்கள் எப்படிப் பாராளுமன்ற நெறிமுறைகளைக் கேலிக் கூத்தாக்கினர் என்பதை மக்கள் மன்றத்தின் முன் எடுத்துச் சொல்லி அறிக்கை விடுத்தார்.

தமிழக சட்டமன்றப் பொன்விழா

1989, ஆம் ஆண்டு மே திங்கள் 4 ஆம் நாள் தமிழ் நாடு சட்டமன்றப் பேரவையின் 50 ஆண்டு நிறைவு விழா, பொன் விழா சீரும் சிறப்புடனும் கொண் டாடப் பட்டது, நான்கு முறை தொடர்ந்து தமிழக சட்ட மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, 18 ஆண்டுகள் உறுப்பினராகவும், சட்டமன்றப் பேர

வைத் தலைவராகவும் இருந்த புலவர் அவர்களுக்கு முதல்வர் கலைஞர் அவர்கள் பொன்னாடை போர்த்திப் பாராட்டினார்.

அண்ணா விருது பெற்ற புலவர்

1989, செப்டம்பர் 17 ஆம் நாள், பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாளன்று, தி.மு.கழகத்தின் முப்பெரும் விழா சென்னையில் நடைபெற்றது. அந்த விழாவில் அண்ணா விருது புலவர் அவர்களுக்கு வழங்கப்பட்டது. முதல்வர் கலைஞர் அவர்கள் புலவர் அவர்களுக்கு அண்ணா விருது வழங்கி ''புலவர் அவர்களுக்கு விருது இன்று வழங்குவதற்கு அவர் பெற்ற புலமை ஒரு காரணம். அண்ணா அவர்களிடத்திலே அவர் கொண்டிருந்த பற்று ஒரு காரணம்; அவர் தமிழுக்கு ஆற்றியிருக்கிற தொண்டு ஒரு காரணம்' என்று பாராட்டினார்.

தமக்கு அண்ணா விருது வழங்கப்பட்ட சிறப்பினைப் பற்றிக் குறிப்பிட்ட புலவர் அவர்கள் ''இந்த விருது வழங்கியதை ஏதோ ஆற்றிய பணிக்காக, சிறப்புச் செய்திருக்கிறீர்கள் என்று கருதவில்லை. வயதானாலும் இன்னும் நீங்கள் ஆற்ற வேண்டிய பணி இருக்கிறது என்கிற வகையில், என்னை உற்சாகம் ஊட்ட டானிக் கொடுப்பதைப் போல் இதை நினைத்து ஏற்று எனது பணியைத் தொடர்ந்து தொய்வின்றி ஆற்றுவேன். வயதானாலும் எனது பணியை உற்சாகத்தோடு செய்து முடிப்பேன்'' என்று உறுதிகூறினார்.

பவளவிழா:

1990-ஏப்ரல் 15-ம் நாள் புலவர் அவர்களுடைய பவளவிழா நிகழ்ச்சி சீரும் சிறப்புடனும் கொண்டா

டப்பட்டது. அவருடைய 75-ஆம் ஆண்டு பிறந்த நாள் விழாவோடு, அவருடைய எழுத்துப் பணியின் பொன் விழாவையும், அவர் எழுதிய 50-வது நூலான தமிழக வரலாறு வெளியீட்டு விழாவும் இணைந்து முப்பெரும் விழாவாக நடத்தப்பட்டது. அன்றைய தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் தலைமை ஏற்று புலவர் அவர்களின் இயக்கப் பணியையும், எழுத்துப் பணியையும் பாராட்டி உரை நிகழ்த்தினார். கேடயம் வழங்கிச் சிறப்பித்தார். இன்னல், இடையூறு வசைமாறி, எதிர்ப்பு, அடக்குமுறைகளைத் தாங்கி கரடு முரடான பாதையிலே நடந்து எதிர் நீச்சல் போட்டு இயக்கத்தை வழி நடத்திய முன்னோடிகளில் ஒருவர் புலவர் என பாராட்டினார்.

ஏற்புரை நிகழ்த்திய புலவர் அவர்கள் தாம் ஆற்றிய பணிகள் குறைவானவையே என்றும் இன்னும் ஆற்ற வேண்டிய பணிகள் ஏராளமாக உள்ளன என்றும் கூறினார். செய்யாறு பகுதியில் இயக்கத்தை வளர்க்கும்பணியில் தம்மோடு இணைந்து பாடுபட்ட பதினோரு அடிமட்டத் தொண்டர்களுக்குத் தம் பவளவிழா நினைவாக ஒவ்வொருவருக்கும் 5,000 ரூபாயை கழகத் தலைவர் வழி அளித்துத் தம் நன்றிக் கடனை ஆற்றி மகிழ்ந்தார்.

### ஆட்சிக் கலைப்பு:

இந்திய அரசியலில் எழுந்த நிலையற்ற குழப்ப நிலை, மத்தியில் அமைந்திருந்த, பிற்பட்ட மக்களுக்காக மண்டல் குழுவின் பரிந்துரைகளைச் செயல் படுத்த முனைந்த தேசிய முன்னணி அரசை ஆட்சிப் பொறுப்பில் இருந்து வெளியேற்றியது. அதையடுத்து காங்கிரஸ் கட்சியின் துணையோடு பிரதமரான சந்திரசேகர், தன் ஆட்சியைக் காத்துக் கொள்ள,

1991 ஜனவரி 30-ஆம் நாள், கழக அரசைப் பதவியிலிருந்து விலக்கினார். இந்த நெறி கெட்ட செயல்களைக் கண்டு மனம் குமுறிய புலவர் அவர்கள் பாராளுமன்ற நெறி முறைகளுக்கு முரணாக, தமிழக ஆளுநர் பர்னாலாவின் ஒப்புதல்கூடப் பெறாத நிலையில் கழக ஆட்சிக் கலைப்பு ஆணையில் கையெழுத்திட்ட பட்டுக்கோட்டைத் தமிழர், குடியரசுத் தலைவர் வெங்கட்ராமன் அவர்களுக்கு நீண்ட தொரு கண்டனக் கடிதம் எழுதினார்.

தமிழகத்தில் மீண்டும் ஒருமுறை குடியரசுத் தலைவர் ஆட்சி உருவானது. அடுத்து வரும் தேர்தலைச் சந்திக்கக் கழகம் தயாரானது. 1991 மார்ச் 3-ஆம் நாள் கழகத்தின் பொதுக்குழுக் கூட்டத்தில் பங்கேற்ற புலவர் அவர்களுக்கு அன்று பிற்பகல் உடல் நலக் குறைவு ஏற்பட்டது. உடலைவிட உள்ளத்தில் ஏற்பட்ட உளைச்சல் காரணத்தால் பல நாட்கள் மருத்துவமனையில் இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. மருத்துவர்களின் சிகிச்சையினால் உடல் நலம் பெற்று, தொடர்ந்து இயக்கப் பணியில் ஈடுபட்டு வரலானார்.

## 1991 பொதுத் தேர்தல்

கழக அரசைப் பதவியிலிருந்து விலக்கிய சந்திரசேகரின் அரசு பெரும்பான்மையிழந்தது. பதவியிலிருந்து விலகியது. மீண்டும் ஒரு பாராளுமன்றத் தேர்தலை நாடு சந்திக்க வேண்டிய கட்டாயத்துக்காளானது. பாராளுமன்றத் தேர்தலோடு தமிழகச் சட்டமன்றத் தேர்தலும் இணைந்து நடக்கும் என்று அறிவிக்கப்பட்டது மருத்துவர்களின் ஆலோசனைகளையும்மீறி, புலவர் அவர்கள் தேர்தல் பணியில் ஈடுபட்டார். நாள்தோறும் செய்யாறு தொகுதியின் பல

ஊர்களுக்கு அவர் தேர்தல் பிரச்சாரம் செய்யும் வகையில் அவருடைய சுற்றுப்பயணம் அமைக்கப் பட்டது.

## பழிச்சொல்

தேர்தல் பணிகள் தீவிரமாக தொடங்சப் பட்டிருந்த நேரம். கழகத்தின் அணிக்கும் எதிரணிக் கும் கடுமையான போட்டி உருவாகியிருந்தது.கழகம் வெற்றி பெறக்கூடிய சூழ்நிலை. அந்தச் சூழ்நிலை யையே மாற்றிய கொடிய நிகழ்ச்சிமே திங்கள் 21ஆம் நாள் இரவு திருப்பெரும்புதூரில் நடந்து விட்டது. முன்னாள் பாரதப் பிரதமர் படுகொலைக்காளா னார். அரசியல் ஆதாயம் தேட முனைந்த எதிரணி யினர் கழகத்தின் மீது பழி சுமத்தினர். கழகத் தோழர்கள் தாக்கப்பட்டனர் அவர்களுடைய உடமைகள் சூறையாடப்பட்டன.

அந்தக் கொடுமைகளுக்குக் கண்டனம் தெரிவிக்க நாடு முழுவதும் மே 29ஆம் நாள் கழகத் தோழர்கள் ஒருநாள் அடையாள உண்ணாவிரதம் இருப்பர் எனக் கழகம் ஆணையிட்டது.

கழகத்தின் ஆணைக்கு என்றென்றும் கட்டுப் படும் புலவர் அவர்கள், கழகத் தோழர்கள் தடுக்க முயன்றும், கேளாது உண்ணா விரதத்தில் பங்கேற் றார். அதையடுத்துப் பல நாட்கள் தொகுதி முழு வதும் சுற்றுப் பயணம் மேற்கொண்டார். மீண்டும் அவர் உடல்நலம் கெட இது காரணமாக அமைந்தது. நீர் கழிப்பதில் சிக்கல் ஏற்பட்டது சென்னைக்கு வந்து மருத்துவ சிகிச்சை பெற்று வந்தார். ஜூன் 12ஆம் நாள், தேர்தலுக்கு இரண்டு நாட்களே இருக் கும் நேரம் அவருக்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

ஊர்களுக்கு அவர் தேர்தல் பிரச்சாரம் செய்யும் வகையில் அவருடைய சுற்றுப்பயணம் அமைக்கப் பட்டது.

பழிச்சொல்

தேர்தல் பணிகள் தீவிரமாக தொடங்சப் பட்டிருந்த நேரம். கழகத்தின் அணிக்கும் எதிரணிக் கும் கடுமையான போட்டி உருவாகியிருந்தது. கழகம் வெற்றி பெறக்கூடிய சூழ்நிலை. அந்தச் சூழ்நிலை யையே மாற்றிய கொடிய நிகழ்ச்சி மே திங்கள் 21ஆம் நாள் இரவு திருப்பெரும்புதூரில் நடந்து விட்டது. முன்னாள் பாரதப் பிரதமர் படுகொலைக்காளா னார். அரசியல் ஆதாயம் தேட முனைந்த எதிரணி யினர் கழகத்தின் மீது பழி சுமத்தினர். கழகத் தோழர்கள் தாக்கப்பட்டனர் அவர்களுடைய உடமைகள் சூறையாடப்பட்டன.

அந்தக் கொடுமைகளுக்குக் கண்டனம் தெரிவிக்க நாடு முழுவதும் மே 29ஆம் நாள் கழகத் தோழர்கள் ஒருநாள் அடையாள உண்ணாவிரதம் இருப்பர் எனக் கழகம் ஆணையிட்டது.

கழகத்தின் ஆணைக்கு என்றென்றும் கட்டுப் படும் புலவர் அவர்கள், கழகத் தோழர்கள் தடுக்க முயன்றும், கேளாது உண்ணா விரதத்தில் பங்கேற் றார். அதையடுத்துப் பல நாட்கள் தொகுதி முழு வதும் சுற்றுப் பயணம் மேற்கொண்டார். மீண்டும் அவர் உடல்நலம் கெட இது காரணமாக அமைந்தது. நீர் கழிப்பதில் சிக்கல் ஏற்பட்டது சென்னைக்கு வந்து மருத்துவ சிகிச்சை பெற்று வந்தார். ஜூன் 12ஆம் நாள், தேர்தலுக்கு இரண்டு நாட்களே இருக் கும் நேரம் அவருக்கு அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

தமக்கு வாக்குரிமை வந்த நாளிலிருந்து தாம் வாக்களிக்க முடியாது போன ஒரே தேர்தல் அது என்பது அவருக்குப் பெரிய மனக்குறை. கழகத்தின் மீது சுமத்தப்பட்ட பழிச்சொல், அதன் விளைவாக ஏற்பட்ட தேர்தல் முடிவுகள் அவருடைய உள்ளத்தை, உடலை வருத்தியது. வெள்ளுடை வேந்தரும், நாயரும், நடேசனாரும் உருவாக்கிய இன உணர்வு தந்தை பெரியாரும், அறிஞர் அண்ணாவும் கட்டிக் காத்த இயக்கம் நிலை குலைந்து போனதே என்று நெஞ்சம் கலங்கினார்.

அறுவைச் சிகிச்சைக்குப் பின் உடல்நலம் தேறி, 29-6-91 அன்று தம் சொந்த ஊருக்குத் திரும்பினார். உடல் நலம்பெற்றது உண்மைதான். ஆனால் உள்ளத்தில் ஏற்பட்டுவிட்ட கொந்தளிப்பு அவரை நிலை கொள்ள விடவில்லை. அதுவே அவரது பிரிவுக்கும் காரணமாக அமைந்து விட்டது.

இயக்கப்பணி, எழுத்துப்பணி, தொகுதிப் பணி என்று காலமெல்லாம் உழைத்த அவர் ஜூலை 2ஆம் நாள் உறங்கச் சென்றவர் மீண்டும் விழிமலரைத் திறக்க மறந்து போனார். மீளா உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

## தொகுதிப் பணி

''செய்யாறு தொகுதியின் மறு பெயர் புலவர் தொகுதி. மக்களின் முன்னேற்றத்தில் அவர் கொண்டிருந்த ஆர்வமும் கடமை யுணர்வும், மற்ற சட்ட மன்ற உறுப்பினர்கட்கெல்லாம் ஒரு எடுத்துக் காட்டு'' என்பார் பேராசிரியர்.

செய்யாறு தொகுதியின் சட்டமன்ற உறுப்பினர் என்ற வகையில் 1962-1980க்கும் இடைப்பட்ட காலத்

தில் தொகுதியின் மேம் பாட்டிற்காகப் புலவர் அவர்கள் ஆற்றிய பணிகள் அளவிட முடி யாதன. அவருடைய பணியைப் பற்றிக் குறிப்பிடும் போது கலைஞர் அவர்கள் ''புலவர் அவர்கள் இந்தத் தொகுதி சட்ட மன்ற உறுப்பினராக எதிர்க்கட்சி வரிசையிலே அமர்ந்திருந்த நேரத்தில் தொகுதிக்குத் தேவையானவற்றை அன்றைய காங்கிரஸ் அமைச்சர் களிடம் வாதாடிவேண்டித் தொகுதி மக்களுக்காகப் பெற்றிருக்கிறார் என்றும், தி.மு.கழகம் ஆளும் கட்சியாக ஆன பின்னர் புலவர் அவர்கள் சட்ட மன்ற உறுப்பினராகப்பணியாற்றி பின்னர் சட்டப் பேரவைத் தலைவராகப் பொறுப்பேற்று தம் தொகுதி மக்களின் நலன் குறித்து அவர் ஆற்றிய தொண்டினைத் தொடர்ந்து, அவரால் செய்யாறு தொகுதி பெற்ற மேம்பாடு குறித்து நாடறியும். செய்யாறு தொகுதிக்குள்ளேயே சுற்றிச் சுழன்று, தொகுதியின் எந்த எந்த மூலை முடுக்கானாலும், குக்கிராமங்களானாலும், பட்டி தொட்டிகளானா லும், அங்கெல்லாம் இருக்கிற ஒவ்வொரு வாக்காளர் பற்றிய பெயரும் அவருக்குத் தெரியும் ஒவ்வொரு குடும்பத்தின் உறுப்பினர்களுடைய பெயரும் அவருக்குத் தெரிகின்ற அளவிற்கு நட்புணர்வோடு, உறவுமுறையோடு, சொந்த பந்தத்தோடு இவர் தம் தொகுதி மக்களுக்காக வழிகாட்டிக் கொண்டிருப்ப வர்'' என்றும் பல படப் பாராட்டுகிறார்.

புலவர் அவர்கள் தம் தொகுதியின் முன்னேற்றத் திற்காக மேற்கொண்ட திட்டங்கள் மலைக்க வைப் பவை. 1967-ஆம் ஆண்டு தி.மு.கழக அரசு அமைந்த வுடன் உருவாக்கப்பட்ட முதல் கல்லூரி செய்யாறு நகரில் உள்ள அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி தான். செய்யாறு பெண்கள் மேல் நிலைப்பள்ளியும்.

பல புதிய பள்ளிகளும் உருவாக்கப்பட்டன. தொகுதி முழுவதும் சாலைகள் பாதைகள் அமைக்கப்பட்டன, எல்லாவற்றிற்கும் மணிமுடி வைத்தாற் போல் ஐம்பது ஆண்டுக் காலம் கிடப்பிலே போடப்பட்டுக் கிடந்த தண்டரை அணைக்கட்டுத் திட்டம் நிறை வேற்றப்பட்டது. தாய் தந்தையரை இழந்து தவிக்கும் குழந்தைகள் இருக்க இடமும் உண்ண உணவும், உண வூட்டக் கல்வியும் அளித்து ஆளாக்கிட அண்ணா அருளகம் அமைக்கப்பட்டது.

கழகம் ஆட்சிப் பொறுப்பிலே இல்லாத நேரத்தி லும், 1977-80 க்கு இடைப்பட்ட காலத்தில் எதிர்க் கட்சி உறுப்பினராக இருந்த புலவர் அவர்கள் தொகுதியின் வளர்ச்சிக்கான திட்டங்களைச் செயல் படுத்த முனைந்தார். செய்யாறு நகரில் முனிசிபல் கோர்ட் அமைக்கப்பட்டதும் அந்தக் கட்டத்தில் தான்.

''பதவியில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் புலவர் எப்போதும் எம்.எல்.ஏ.'' என்று கலைஞர் அவர்கள் பாராட்டியதற்கொப்ப தொடர்ந்து தம் தொகுதியின் மேம்பாட்டிற்காகப் பணியாற்றி வருப வர் புலவர். அவசர கால ஆட்சியின் போது அரை குறையாய் நிறுத்தி வைக்கப்பட்டுவிட்ட திருமண மண்டபம், பொன்விழா மண்டபம் போன்றவற்றை முடிக்கும் பணியிலும், அவர் எண்ணத்தில் இடம் பெற்ற செய்யாறு சர்க்கரை ஆலை, இராணிப் பேட்டை-திண்டிவனம் ரெயில் பாதை போன்ற வற்றைச் செயல்படுத்தும் முயற்சியிலும் தொடர்ந்து முயன்று வந்தார்.

தாம் படித்த செய்யாறு உயர்நிலைப் பள்ளியின் பவள விழாவைப் பெருஞ்சிறப்புடன் கொண்டாடு வதற்கான முயற்சியில் முழுமையாக ஈடுபட்டு வந்

தார். பள்ளியின் பழைய மாணவர்களையெல்லாம் தேடிப்பிடித்து, தமிழகத்தில், இந்தியாவில் மட்டுமல்லாமல், கடல்கடந்த நாடுகளிலும் சென்று பணியாற்றி வருவோருடன் தொடர்பு கொண்டு மிகப் பெரியதொரு விழாவாக அதை அமைத்திடத் திட்டமிட்டிருந்தார்.

''இந்தச் செய்யாறு தொகுதிக்குச் சொந்தக்காரர் என்று கருதிக் கொண்டிருப்பவர். அந்த அளவிற்கு இந்தத் தொகுதிக்குத் தேவையான பணிகளையெல்லாம் அவர் வெற்றி பெறுகின்ற நேரத்திலும் சரி, வெற்றி பெற இயலாத நேரத்திலும் சரி, அல்லது போட்டியிடாத நேரத்திலும் சரி, எப்போதும் தன்னை இந்தத் தொகுதியின் சட்டமன்ற உறுப்பினர் என்று எண்ணிக்கொண்டு ஆற்றி வருகின்ற அருப்பணிகள் இந்த இயக்கத்திற்குப் பெருமை சேர்க்கக்கூடியவையாகும்'' என்று புலவர் அவர்களின் தொகுதிப் பணியைப் பாராட்டும் கலைஞர் அவர்கள் ''இன்று கழகத்திலே வெற்றி பெற்றிருக்கின்ற சட்டமன்ற உறுப்பினர்கள் எல்லாம் தம் தொகுதியைப் பற்றி எந்த அளவு ஆர்வமும் அக்கறையும் காட்ட வேண்டும் என்பதற்கு ஒருவழி காட்டியாக பாடமாக அமைந்திருக்கக் கூடியவர் புலவர்', என்று பெருமிதப்படுகிறார்.

## தமிழ்ப் பணி

அரசியல் பணி புலவர் அவர்களின் புறப்பணி என்றால், தமிழ்ப் பணி அவரது அகப்பணி என்று கூறலாம். ''தமிழுக்கும், தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும், தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்'' என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப் பெற்ற புலவர் அவர்களின்

தமிழ்ப்பற்றும் தமிழ்ப் பணியும் அவருடைய அரசியல் நுழைவுக்கு முன்னே பிறந்தவை. அரசியல் வாழ்வில் அவரை அடியெடுத்து வைக்கத் தூண்டுதலாய் அமைந்தவை. அவருடைய அரசியல் பணியோடு பின்னிப் பிணைந்து நிற்பவை.

### ஒளவை தமிழ்க் கழகம்

பள்ளிப் பருவத்திலேயே ஒளவைத் தமிழ்க் கழகம் நிறுவிய புலவர் அவர்கள் அக்கழகத்தின் வழித் தம் ஆசிரியர் ஒளவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் முதன் முதலாக உரையெழுதிய 'ஐங்குறு நூறு' நூலைப் பதிப்பித்துத் தமிழ்ப் பணியாற்றியுள்ளார்.

### இலக்கியச் சொற்பொழிவுகள்

இளம் வயதிலேயே திருவத்திபுரத்தில், மறை மலையடிகள், ஞானியார் அடிகள் போன்ற தமிழறிஞர்களைக் கொண்டு இலக்கியச் சொற் பொழிவுகளையும், தமிழ் விழாவையும் நடத்தினார். ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில் 22-2-1942-இல் சென்னையில் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தலைமையில் நடைபெற்ற மாநாட்டில் பாலை என்ற தலைப்பில் இலக்கியப் பேருரை ஒன்றையும் நிகழ்த்தினார். ''தமிழர்களுடைய வாழ்வையும், மரபையும் பெருமையையும் தான் உணர்ந்தது மாத்திரம் அல்லாது, நாட்டு மக்களுக்கும் எடுத்துச் சொல்கிற ஆற்றல் பெற்ற பெரும் புலவர்களுள் ஒருவராகத் திகழ்கிறவர்'' என்று கலைஞர் அவர்கள் புலவர் அவர்களுடைய இலக்கியத் திறனைப் பாராட்டுகிறார்.

கழகத்தின் தொடக்க காலத்தில் பொங்கல் விழாக்கள் மூலம் செய்யாறு பகுதியில் தமிழுணர்வு பரவச் செய்தார். வள்ளுவர் ஈராயிரம் ஆண்டு

நிறைவு விழாவைப் பெரும் தமிழ் விழாவாக எடுத்தார். அவ்விழாவையொட்டி இலங்கை சென்று இலக்கியச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். சென்னை வானொலியில் தொடர் சொற்பொழிவுகளாகத் திருக்குறள் விளக்கவுரையாற்றினார்.

### எழுத்துப் பணி

உரை வேந்தர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்களிடம் தமிழ்க் கல்வி பயின்ற புலவர் அவர்கள், தம் ஆசானைப் போலவே எதையும் இளமையிலிருந்தே ஆராய்ச்சிக் கண்ணோடு பார்க்கும் ஆற்றல் பெற்றிருந்தார். பள்ளி இறுதி வகுப்பை முடித்திருந்த நிலையிலேயே பல ஆய்வுக் கட்டுரைகளைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் இதழான தமிழ்ப் பொழிலில் எழுதி வந்தார். 1935-ஆம் ஆண்டில் அவர் எழுதிய "காவிரி" என்ற கட்டுரை தமிழ்ப் பொழிலில் வந்துள்ளது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் செந்தமிழ்ச் செல்வி இதழிலும், செங்குந்தமித்திரன், சித்தாந்தம் போன்ற இதழ்களிலும் பல இலக்கியக் கட்டுரைகளை எழுதி வந்தார்.

### நூலாசிரியர்

தமிழால் உயர்ந்து, தம் தமிழ்ப்பணி மூலம் தமிழுக்கும் உயர்வு தேடித் தந்த புலவர் அவர்கள் எழுத்துலகம் நினைவு கொள்ளும்படி நூற் பணி செய்த நூலாளர் எனவும் போற்றப்படுகிறார்.

புலவர் அவர்களின் முதல் நூலான திருமாவளவன் 1951-ஆம் ஆண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் வெளியிடப்பட்டது. அதைத் தொடர்ந்து 'சங்ககாலப் புலவர் வரிசை,' 'சங்க கால அரசர் வரிசை' போன்ற வரிசை நூல்களும், 'கால்டுவெல் ஒப்பிலக்கணத் தமிழாக்கம்' (முதல்

பிரிவு) நூலும் கழகத்தின் சார்பில் வெளியிடப் பட்டன.

புலவர் அவர்களின் எழுத்தோவியங்களுக்குத் தமிழ் மக்களிடையே ஏற்பட்ட வரவேற்பைக் கண்டு வேறு பல பதிப்பகத்தினரும் அவருடைய நூல்களை வெளியிடமுன்வந்தனர். அதனையடுத்து, கால்டுவெல் ஒப்பிலக்கணத் தமிழாக்கம், நற்றிணை விருந்து, குறுந்தொகைக் கோவை, 'இலக்கிய வளர்ச்சி', குறிஞ் சிக்குமரி, நெய்தற் கன்னி, முல்லைக்கொடி, மருத நில மங்கை, பாலைச் செல்வி, தமிழர் வாழ்வு, தமிழர் வாணிகம், மாதரார் தொழுதேத்தும் மாண் புடையாள், தமிழர் பண்பு, இலக்கியம் கண்ட காவ லர், அறம் உரைத்த அரசர், சாத்தன் கதைகள், கூத்தன் தமிழ் போன்ற பல இலக்கிய நூல்களும், கலிங்கம் கண்ட காவலர், தமிழர் தளபதிகள், பண் டைத் தமிழர் போர் நெறி போன்ற வரலாற்று ஆய்வு நூல்களும் புலவர் அவர்களால் படைக்கப் பட்டன.

'கால்டுவெல் ஒப்பிலக்கணம்' புலவர் அவர் களின் இருமொழிப் புலமைக்கு எடுத்துக் காட்டாய் அவர் தம் புகழ் மகுடத்தில் ஒளி வீசும் மாணிக்க மாய் விளங்குகிறது,

புலவர் அவர்களின் எழுத்துப் பணியைப் பற்றிக் கூறும் பொழுது, "சங்க இலக்கியத்தை, அந்தப் பாடல்களைப் படிக்கின்ற ஆற்றலைப் பெற முடியா தவர்கள் எல்லாம்கூட, சங்கத் தமிழருடைய பெரு மையைத் தெரிந்து கொள்ளக்கூடிய அளவிற்கு ஏராளமான நூல்களை எழுதியுள்ளார்" என்று பேராசிரியர் அவர்கள் பாராட்டுகிறார்.

புலவரேறு

புலவர்களுள் புலவராய், திருவண்ணாமலை—குன்றக்குடி ஆதினத்தாரால் 'புலவரேறு' எனும் பட்டமளித்துப் பாராட்டப் பெற்ற புலவர் அவர்களின் தமிழ்ப் பணி, பொன் விழா கண்டது.

தொடர்ந்து பல புதிய நூல்களை இயற்றும் பணியில் தம்மை ஈடுபடுத்தி வந்தார். திரு.பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய 'History of the Tamils' என்ற தமிழக வரலாறு நூலைத் தமிழில் மொழி பெயர்த்து, திறனாய்வு செய்து இரண்டு பகுதிகளாக எழுதியுள்ளார்.

புலவர் அவர்களின் பெருந் தமிழ்ப் பணியைப் போற்றிப் பாராட்டும் வகையில் தமிழக அரசு 1980ஆம் ஆண்டிற்குரிய திரு. வி. க. விருதை வழங்கி மகிழ்ந்தது.

26–8–90 அன்று சென்னை கலைவாணர் அரங்கில் நடைபெற்ற விழாவில் அன்றைய கல்வியமைச்சர் பேராசிரியர் அவர்கள் தலைமையில் தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் பொன்னாடை அணிவித்து விருதினை வழங்கி போற்றினார்.

புலவர் அவர்களின் தமிழ்ப் பணியைப் போற்றும் வகையில் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் 1986ஆம் ஆண்டிற்குரிய தமிழ்ப் பேரவைச் செம்மல் என்ற பட்டம் வழங்கிப் பாராட்ட முன்வந்தது' ஆயினும் மாறி வந்த அரசியல் சூழ்நிலை அவ்விழா நிகழ்ச்சியை ஒத்திவைக்கச் செய்து விட்டது.

புலவர் அவர்களின் தமிழ்ப்பணி தொடர்ந்தது. முல்லை, வீ. ஆர். இராமச்சந்திர தீட்சிதர் அவர்கள் 'Origin and Spread of Tamils' என்ற நூலின் தமிழாக்கமாக 'தமிழரின் தோற்றமும் பரவலும்' என்ற நூல், பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் எழுதிய

'Pre-Aryan Tamil Calture' என்ற நூலின் தமிழாக்கமாக 'ஆரியர்க்கு முந்திய தமிழர் பண்பாடு' என்ற நூல் ஆகியன நூல் வடிவம் பெற்றுள்ளன.

பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் மற்றொரு நூலாகிய Stone Age in India (இந்தியாவின் கற்காலம்) என்ற நூலை மொழிபெயர்த்துக் கொண்டுள்ளேன். என் எழுத்துப் பணி தொடரும். குறள் பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். ''கல்வி கரையில; கற்பவர் நாள் சில'' காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி ஓரளவேனும் முற்றுப்பெறும்'' என்று புலவர் அவர்கள் தம் குறிப்பில் தம் எழுத்துப் பணியைத் தொடர வேண்டும் என்ற தம் தணியா ஆவலைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஆனால், காலம் முற்றுப் பெறாத நிலையிலேயே அவருடைய எழுத்துப்பணி எச்சமாகவே நின்று போயிற்று. காலம் செய்த கொடுமை இது.

''சங்க இலக்கியங்களையும், தமிழக வரலாற்றையும் ஆய்வு செய்து நூல்கள் பலவற்றை வெளியிட்டவர். இயக்கத்திலே இரண்டறக் கலந்து தமிழ்ப் பண்பாட்டினையும், தமிழ் உணர்வினையும் பரப்பிடத் தொடர்ந்து பணியாற்றி வருபவர் புலவர் பெருமகன்'' என்ற கலைஞர் அவர்களின் புகழ்ந்துரைக்கேற்பப் பணியாற்றி வந்த புலவர் அவர்களின் தமிழ்ப் பணியை ''தமிழ்ப் புலவர்களுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கிய பெருமைக்குரியவர் அன்புக்குரிய புலவர் கோவிந்தன் அவர்கள்'' என, பேராசிரியர் அவர்கள் மனமுவந்து பாராட்டினார்.

காட்சிக்கு எளியவர்

கருமைநிற மேனி, நுரைபோல் நரைத்த தலை, நடுத்தர உயரம், அதற்கேற்ற உடல்வாகு, வேகமான நடை, நகை தவழும் இன்முகம், அழுத்தமான குரல், தும்பைப் பூவைப் போன்ற தூய வெண்ணிற வேட்டி, சட்டை, மேல்துண்டு இவைதான் புலவர் அவர்களின் புறத்தோற்றம்.

அடக்கம், கனிவு, அன்பு, இன்சொல் அன்றி பகைவரிடத்தும் இழிசொல் பகராத பண்பு, உள்ளதை உள்ளவாறே கூறும் மனத்திண்மை, நல்லனவே எண்ணி, நல்லனவே செய்யும் மாண்பு, எந்தச் சூழ்நிலையிலும் கொள்கை பிறழாத மன உறுதி, ஒழுக்கம், ஆழ்ந்தஅறிவு, எல்லோர்க்கும் நல்லவராய் விளங்கும் இனிய பண்பாடு, பொறுமை, செந்தண்மை, பணிவு, அமைதி, ஆழ்ந்த தமிழ்ப் பற்று இவைதான் புலவர் அவர்களின் அகத் தோற்றம்.

புலவர் அவர்களுடைய 77 ஆண்டு கால நிறைவு மிக்க வாழ்க்கையில் அவர் தம் பெற்றோருக்கு எல்லையற்ற பற்றும் பாசமுமிக்க மகனாக வாழ்ந்திருக்கிறார். உடன் பிறந்தவரிடத்தே உற்ற பாசமும், உயிரன்பும் கொண்ட சகோதரராகவும், பெற்ற பிள்ளைகள், பெண்கள், பேரன், பேத்திகள் என்று பெருகி நிற்கும் குடும்பத்தின் பொறுப்புள்ள தலைவராகவும் விளங்கி வந்தார்.

பாசமிக்க அண்ணன்

உடன் பிறந்த தம்பிக்குப் பாசமிக்க அண்ணனாக விளங்கி வந்தவர் புலவர் அவர்கள். 'நாம்தான் கல்லூரி சென்று படிக்கவியலாது போயிற்று. நம் தம்பியாவது படிக்கட்டும்' என்ற எண்ணத்துடன்

தன் இன்னல்களைப் பாராது அவரைப் பட்டப் படிப்பு படிக்க வைத்தார்.

தம் அன்னை உடல்நலக் குறைவுற்றிருந்த அன்று திருவத்திபுரத்தில் தகுந்த மருத்துவமனையோ டாக்டர்களோ இல்லாது போனதால் அன்னையைக் காப்பாற்ற முடியாதுபோன சூழ்நிலை, தம் தம்பியை மருத்துவராக்கத் தூண்டுதலாய் அமைந்தது. திருவத்திபுரத்திலேயே முதல் டாக்டர் என்ற சிறப்பைப் பெற்றவர் புலவர் அவர்களின் தம்பியான டாக்டர் நடராசன் அவர்கள்தான்.

செய்யாறு வட்டத்தில் கடுமையான நோய்களுக்கு ஆளான மக்கள் பலருக்கு,அவர்கள் சென்னை மருத்துவ மனைகளில் சேர்க்கப்படவும், உரிய சிகிச்சை பெற்று நலமடையும், தம் தம்பி டாக்டர் நடராசன் அவர்கள் மூலம் புலவர் அவர்கள் உதவி புரிந்துள்ளார் என்பதைச் செய்யாறு வட்ட மக்கள் பலரும் அறிவர்.

### தமிழ் மணம் கமழும் இல்லம்

''புலவர் வீட்டில் அவரது குழந்தைகளுக்குச் சூட்டப்பட்டிருக்கிற பெயர்களைப் பார்த்தாலே தமிழ்ப் பற்று இந்த இல்லத்தில் எந்த அளவிற்குப் பெருக்கெடுத்து ஓடுகிறது என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். மொழி மனிதனுக்கு விழி போன்றது என்பதை விளக்கும் அளவிற்கு அந்தப் பெயர்கள் அமைந்திருப்பதை நான் காண்கிறேன்'' என்று கலைஞர் அவர்கள் ஒருமுறை சுட்டிக் காட்டியதைப் போல புலவர் அவர்கள் தம் தமிழ் மொழிப் பற்றின் சின்னமாக, அறிவுடைநம்பி, செங்குட்டுவன், இளந்திரையன், நெடுஞ்செழியன் போன்ற தமிழ் மன்னர்களின் பெயர்களையும், செந்தமிழ்ச் செல்வி,

தேமொழி, மலர்விழி, அன்பரசி, பூங்குழலி போன்ற பெயர்களையும் தம் பிள்ளைகளுக்குச் சூட்டி மகிழ்ந்தார்.

தமிழுக்குத் தொண்டு செய்து தலைமையினைப் பெற்ற புலவர் அவர்களுடைய இல்லத்தில் நடைபெறும் விழாக்களும் தமிழ்மணம் கமழ்வதாக அமைந்தன, அமைந்து வருகின்றன. ''புலவர் வீட்டு விழாக்கள் என்றால் அறிவை வளப்படுத்தும் விழாவாகும். சமுதாயத்தில் சீர்திருத்தம் தேவை என்பதை வலியுறுத்தும் வகையில் அமையும் விழா என்பதாகும். தமிழும் தமிழ் உணர்ச்சியும் மிளிர நடைபெறும் விழா'' என்று கலைஞர் அவர்கள் போற்றுவது போலத் தம் இல்ல விழாக்களை இன உணர்வும் தமிழ் உணர்வும் தம் இரு கண்கள் எனக்காட்டும் வகையில் அமைத்து வந்தார்.

தம்முடைய 77 ஆண்டு நிறைந்த வாழ்க்கையில் 1934 முதல் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக, இயக்கப்பணிகளில் ஈடுபட்டு வந்த புலவர் அவர்களுக்கும், இயக்கத் தலைவர்களுக்கும் இடையே இருந்த தொடர்பு, தனித்தன்மை வாய்ந்த ஒன்றாகும்.

### அண்ணாவும் புலவரும்

அறிஞர் அண்ணா அவர்களோடு தமக்கிருந்த ஆழ்ந்த நட்பை, பாசத்தை, பெருமதிப்பைப் பற்றி புலவர் அவர்களே படம் பிடித்துக் காட்டியுள்ளார். ''அண்ணா அவர்கள் காஞ்சியிலே பிறந்திருந்தாலும், அவருடைய இளமைப் பருவ நாட்களெல்லாம் திருவத்திபுரத்தில் கழிந்தது. அண்ணா அவர்களுக்கு ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் திருவத்திபுரத்திற்கு வருவார்கள். தனக்குத் திருக்குறளில் ஏற்படும் ஐயங்களைப் போக்கிக் கொள்ள எனக்குத் தமிழறிவு

ஊட்டிய ஆசிரியரைச் சந்திக்க வாரத்திற்கொரு முறை திருவத்திபுரம் வருவார்கள். அண்ணா அவர்கள் நடித்த முதல் நாடகம் நடைபெற்றதும் அங்குதான். அண்ணாவின் முகத்தில் அரிதாரம் பூசியது இந்தக் கை. அவர் கட்டிக் கொள்ள வேண்டிய காவி ஆடையைத் துவைத்துக் கொடுத்ததும் இந்தக் கைதான்'' என்று பெருமிதம் கொள்கிறார். பாசமுடன் 'கோவிந்தா' என்று அழைத்த அண்ணாவின் அழைப்புத்தான் தமிழ்ப் புலவரை அரசியற் புலவராக மாற்றியது.

### கலைஞரும் புலவரும்

தமக்கும் புலவருக்கும் உள்ள தொடர்பைப் பற்றிக் கலைஞர் அவர்கள் ''என்னிடம் நெஞ்சார அன்பு கொண்ட தமிழ்ப் பெரியவர்' நெருக்கடி காலத்து நெருப்புச் சூட்டில் கழகம் வாட்டப்பட்ட போதும் அடிக்கடி வந்து ஆறுதல் சொன்ன தமிறிஞர்'' என்றும், ''எப்போதுமே நமது புலவருக்கு என்னிடம் கொஞ்சம் அதிகமாகவே உரிமை எடுத்துக் கொள்கிற பழக்கம் உண்டு'' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

புலவர் அவர்களிடம் தமக்குள்ள தொடர்பைப் பற்றிக் குறிப்பிடும்போது, கலைஞர் அவர்கள் ''முதலமைச்சராக நான் இருந்தபோது அவருடைய அறிவுரையைப் பல நேரங்களில் கேட்டவன் நான். ஏனென்றால், என்னைவிட மூத்தவர், என்னைவிட இந்த இயக்கத்திலே 'சீனியர்' என்ற வகையிலே அவருடைய அறிவுரையைக் கேட்கக் கூடியவன் நான்'' என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

செய்யாற்றுச் செம்மல்

''மக்கள் தொண்டே மகேசன் தொண்டு, கல்விப் பணியே கடவுட் பணி'' என்ற உள்ளங்கொண்டு தமது வாழ்நாள் கடமையாக ஏற்று அயராது பாடுபட்டு வருபவர்'' என பேராசிரியர் அவர்கள், புலவர் அவர்களின் தொண்டுள்ளத்தைப் பாராட்டுகிறார்.

படாடோபம், ஆரவாரம், ஆடம்பரம் இல்லாமல் பொதுத் தொண்டாற்றி வரும் புலவர் அவர்கள் அளவுக்கு மீறிய பொறுமையை அணிகலனாய்ப் பூண்டவர். பதவியில் இருந்தபோதும், பதவி இல்லாத நிலையிலும், தம்மிடம் உதவிகோரி வருபவர்களுக்கு முடியக் கூடியதாக இருந்தால் நிச்சயம் செய்து கொடுப்பார். இயலாததாக இருந்தால், உதவிகோரி வந்தவருக்கு வருத்தமோ, ஏமாற்றமோ உண்டாகாத வகையில் பதில் சொல்லியனுப்புவார். அவர், மக்களிடத்தில் அவர்களுடைய நிலைக்குச் சென்று பழகும் தன்மை உடையவர், காட்சிக்கு எளியவர். கடுஞ்சொல் அற்றவர். கட்சி, சாதி, மத, இன வேறுபாடின்றி செய்யாறு வட்ட மக்களால் 'பெரியவர்' என்று அழைக்கப்பட்டு வந்தார்.

தமிழகத்தில், மிகவும் பின் தங்கிய பகுதியில் உள்ள ஒரு சிற்றூரில், மிக எளிய குடும்பத்தில் பிறந்து தம் விடா முயற்சியினால் வாழ்க்கையில் உயர்ந்தவர் புலவர் அவர்கள். தமிழால் வளர்ந்து, தமிழை வளர்த்து, தமிழ்த் தொண்டால் உயர்வு பெற்றவர் அவர்.

அந்தத் தமிழ்ப் புலமையும் ஆர்வமும் உருவாக்கிய பண்பட்ட உள்ளத்தின் காரணமாக சட்டமன்றத் தலைமை ஏற்று நிறைவாக நடத்தியவர் அவர். இனிய இயல்பு, எளிய வாழ்வு, எழிலார்ந்த

தமிழ்த் தொண்டு, அஞ்சாமை, நேர்மை ஆகிய பண்புகளுக்கு அணிகலனாக விளங்கி வந்தவர். கழகத்தின் தமிழ்க் கருவூலமாகப் போற்றப் பட்டவர்.

புலவர் அவர்கள் வெற்றியையும் தோல்வியையும் ஒரே நிலையில் கருதும் ஆன்றமைந்தடங்கிய கொள்கைச் சான்றோராகத் திகழ்ந்தவர். காலத் திற்கும் நேரத்திற்கும் ஏற்பத் தம் கொள்கைகளை அமைத்துக் கொண்டு, நெகிழ்ந்து வாழ்வோர் போலன்றி அழுத்தமும் உறுதியும் முழுவதும் கைவரப் பெற்று ஏற்றுக் கொண்ட கொள்கைகளை விடாப் பிடியாகக் கைக் கொண்டு வாழ்ந்த சீராளர்.

அடுக்கடுக்காக இன்னல்கள் இழைக்கப்பட்ட போதும், அடக்கு முறைகளுக்கும் அவதூறு வழக்கு களுக்கும் ஆளாக்கப்பட்டபோதும், அற்ற குளத்து அறுநீர்ப் பறவைகளைப் போல அல்லாது, கட்சியை விட்டு நீங்காது நின்று, கட்சிக்குக் கேடு வந்த நேரத்தி லெல்லாம் கட்சியைக் கட்டிக் காக்கும் பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, இயக்கப் பணியில் தன்னை முழுமையாக ஒப்படைத்திருந்தவர் புலவர் அவர்கள் ஆவார்.

"தன்மான இயக்கத் தமிழ்ப் புலவர்-பாதை மாறாத பகுத்தறிவுவாதி, இயக்கத்திற்கு வந்த எந்த சோதனையிலும் தலை நிமிர்ந்து நின்றவர் புலவர் பெருந்தகை கோவிந்தன். கழகத்தையும் பொதுப் பணியையும் இரு கண்களாகக் கொண்டு செய லாற்றிய செந்தமிழ் அறிஞர்" என்று கழகத் தலைவர் கண்ணீர்மல்க புலவர் அவர்களின் பெருமை யினைப் பாராட்டியுள்ளார்.

"பைந்தமிழ் வல்ல புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக்

கண் கொண்டு ஆய்ந்து, பொற்காலத் தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன் தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை யுடையவர் புலவர்'' என்று போற்றிய பேராசிரியர் அவர்கள், ''சட்டப்பேரவை உறுப்பினராகத் திகழ்ந்த காலத்திலும், பேரவைத் துணைத் தலைவ ராகவும், தலைவராகவும் விளங்கிய காலத்திலும் புலவர் அவர்கள் செய்யாறு தொகுதிமக்களின் முன் னேற்றம் கருதி ஆற்றிய பணிகள் ஒரு தனி வரலாறு'' என்று சுட்டிக் காட்டியுள்ளார்.

அந்த வரலாற்றை உணர்ந்திருந்த செய்யாறு தொகுதி மக்களெல்லாம் கரம் கூப்பி, நின்று, கதறி யழுது கடைசியாக அந்த வரலாற்று நாயகனுக்கு விடை கொடுத்த காட்சி நெஞ்சை நெகிழ வைத்த ஒன்றாக அமைந்தது.

''தமிழுக்குத் தொண்டு செய்வோர் சாவதில்லை தம் வாழ்நாள் முழுவதும், காலம் கரம் பிடித்து அழைத்துப் போன அந்தக் கடைசி நாள் வரை தமிழ்ப் பணியாற்றிய புலவர் வாழ்வார்! அவர் உருவாக்கி தமிழ் உலகிற்கு அளித்துள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்து வாழ்வார். தமிழ் படித்தோர் நெஞ்சமெல்லாம் நிறைந்து வாழ்வார்.

'செய்யாறு தொகுதி புலவர் தொகுதி' எனத் தனிச்சிறப்பு பெறும் அளவிற்குத் தொண்டாற்றி அவர் உருவாக்கியுள்ள செய்யாறு அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி, பெண்கள் மேல்நிலைப் பள்ளி, செய்யாறு வட்டம் வளம் பெற்று நலங்கொழிக்கப் பாய்ந்தோடும் தண்டரை அணைக் கால்வாய்,

சர்க்கரை ஆலை, ஆதரவற்ற பிள்ளைகளுக்கு அடைக்கலம் தரும் அண்ணா அருளகம், இவையெல்லாம் காலமெல்லாம் புலவர் புகழ்பாடி நிற்கும் நினைவுச் சின்னங்களாய் அமைந்து, எப்படிப்பட்ட ஒரு பெரியவரை, பெரும்புலவரை, பகுத்தறிவுச் செம்மலை, பொதுநலம் போற்றித் தன்னலம் ஒதுக்கிய தகைமையாளரை, ஆன்றவிந்து அடங்கிய சான்றோரை இந்த மண் பெற்றிருந்தது என்பதை வருங்காலம் சமுதாயம் உணரும் வகையில் பறை சாற்றி நிற்கும் என்பதில் ஐயமில்லை.

# செய்யாறு தொகுதியில் ஆக்கப் பணிகள் புலவரின் சாதனைப் பட்டியல்

1. அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி, செய்யாறு.
2. தொகுதியில் நிறுவிய உயர்நிலைப் பள்ளிகள்—10.
3. செய்யாறு மகளிர் அரசு மேனிலைப் பள்ளிக்குப் புதிய கட்டடம்,
4. 300 மக்கள் தொகையும் 30 பள்ளி செல்லும் பிள்ளைகளும் கொண்ட சிற்றூர்தோறும் அமைத்த துவக்கப் பள்ளிகள்—28.
5. தண்டரை அணைக்கட்டு.
6. வட இலுப்பைப் பெரும்பாக்கம் தரைப் பாலம்.
7. வாழைப்பந்தல்முனுகப்பட்டு தரைப்பாலம்.
8. தொகுதியில் அமைத்த சாலைகள்—56.
9. செய்யாறு அரசு மருத்துவமனைக்குப் புதிய கட்டடம்—4.
10. திருவோத்தூர் அருள்மிகு வேதபுரீஸ்வரர் திருக்கோயில்—திருமண மண்டபம்.
11. செய்யாறு — உரிமையியல் நடுவர் நீதி மன்றம் (முன்சிப் கோர்ட்டு).
12. துணை ஆட்சித் தலைவர் (R.D.O) அலுவலகத்திற்குப் புதிய கட்டடம்.

13. தொகுதியிலுள்ள அரிசனக் காலனிகள் மொத்தம்—150. மனைப் பட்டாக்கள் பெற்ற காலனிகள்—113.

14. அரிசனக் காலனிகளுக்கு மேனிலைக் குடிநீர்த் தொட்டிகள் அமைத்தது –39.

15. அரிசன மக்களுக்குக் கான்க்ரீட் வீடுகள்—405.

16. அறிஞர் அண்ணா கூட்டுறவு வீடு கட்டும் சங்கம், கூட்டுறவு வீட்டு அடைமானச் சங்கம்—இவைகளின் மூலம் கட்டிய வீடுகள் —1000.

17. திருவத்திபுரம் கூட்டுறவு வீடு அடைமானச் சங்கத்திற்குப் புதிய கட்டடம்.

18. திருவத்திபுரம் கூட்டுறவு நகர வங்கிக்கு (Urban Bank)ச் சொந்தக் கட்டடம்.

19. செய்யாறு கூட்டுறவு சர்க்கரை ஆலை.

20. அண்ணா அருளகம்— (50) பிள்ளைகளுக்குப் புகலிடம்.)

21. சிற்றூர், பேரூர், காலனிகள் அனைத்திற்கும் நூற்றுக்கு நூறு மின் இணைப்பு.

22. திட்டமிட்டுள்ள பெரும்பணி : இராணிப் பேட்டை—திண்டிவனம் ரெயில் இணைப்பு (வழி : ஆற்காடு, செய்யாறு, வந்தவாசி.)

23. செய்யாறு அரசு ஆடவர் மேல்நிலைப்பள்ளி பவளவிழா.

# செந்தமிழ்ப் புலவர் சிந்திய முத்துக்கள்!

| நூல் பெயர் | வெளியிட்ட ஆண்டு |
|---|---|
| 1. திருமாவளவன் | 1951 |
| 2. நக்கீரர் | 1952 |
| 3. பரணர் | 1952 |
| 4. கபிலர் | 1952 |
| 5. ஔவையார் | 1953 |
| 6. பெண்பாற் புலவர் | 1953 |
| 7. உவமையால் பெயர் பெற்றவர் | 1953 |
| 8. காவல பாவலர் | 1953 |
| 9. கிழார்ப் பெயர் பெற்றவர் | 1954 |
| 10. வணிகரிற் புலவர் | 1954 |
| 11. மாநகர்ப் புலவர்கள் 1 | 1954 |
| 12. மாநகர்ப் புலவர்கள் 2 | 1954 |
| 13. மாநகர்ப் புலவர்கள் 3 | 1954 |
| 14. உழைப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர் | 1954 |
| 15. அதியன் விண்ணத்தனார் முதலிய 65 புலவர்கள் | 1954 |
| 16. குட்டுவன் கண்ணனார் முதலிய 80 புலவர் | 1954 |
| 17. பேயனார் முதலிய 39 புலவர் | 1954 |
| 18. சேரர் | 1954 |

| | | |
|---|---|---|
| 19. | சோழர் | 1954 |
| 20. | பாண்டியர் | 1954 |
| 21. | வள்ளல்கள் | 1954 |
| 22. | அகுதை முதலிய நாற்பத்து நால்வர் | 1954 |
| 23. | திரையன் முதலிய இருபத்து ஒன்பதின்மர் | 1954 |
| 24. | கால்டுவெல் ஒப்பிலக்கணம் | 1954 |
| 25. | இலக்கிய வளர்ச்சி | 1955 |
| 26. | அறம் உரைத்த அரசர் | 1956 |
| 27. | நற்றிணை விருந்து | 1956 |
| 28. | குறிஞ்சிக்குமரி | 1956 |
| 29. | முல்லைக்கொடி | 1957 |
| 30. | கூத்தன் தமிழ் | 1957 |
| 31. | கழுமலப் போர் | 1958 |
| 32. | மருதநில மங்கை | 1958 |
| 33. | பாலைச் செல்வி | 1958 |
| 34. | நெய்தற்கன்னி | 1958 |
| 35. | குறுந்தொகைக்கோவை | 1959 |
| 36. | தமிழர் வாணிகம் | 1959 |
| 37. | கலிங்கம் கண்ட காவலர் | 1959 |
| 38. | தமிழர் தளபதிகள் | 1960 |
| 39. | சாத்தன் கதைகள் | 1960 |
| 40. | மாதரார் தொழுதேத்தும் மாண்புடையார் | 1960 |
| 41. | தமிழர் வாழ்வு | 1960 |

42. தமிழகத்தில் கோசர் 1960
43. பண்டைத் தமிழர் போர்நெறி 1960
44. காவிரி 1990
45. சிலம்பொலி 1990
46. புண்ணுமிழ் குருதி 1990
47. அடுநெய் ஆவுதி 1990
48. கமழ்குரல்துழய் 1990
49. சுடர்வீ வேங்கை 1990
50. வடுவடு நுண்ணயர் 1990
51. தமிழர் வரலாறு 1990
52. முல்லை
53. ஆரியர்க்கு முந்திய தமிழர்பண்பாடு அச்சில்
54. தமிழரின் தோற்றமும் பரவலும் அச்சில்
55. கோசர் ,,

# *என் கடன் பணி செய்து கிடப்பதே!
# என் தமிழ்ப்பணி

புலவர் கா. கோவிந்தன்

1932 : செய்யாறு உயர்நிலைப் பள்ளியில் 8-வது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறேன். தமிழாசிரியர், உயர் திருவாளர், மகாவித்வான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள். எங்கள் ஊரில் பானு கவியார் என்ற பெரும்புலவர், துறவியார் இருந்தார். வடலூர் வள்ளலார் இயற்றிய அருட்பா குறித்து எழுந்த "அருட்பா, மருட்பா" வாதத்தில், அருட்பா வாத நெறியாளரோடு நின்று வாதிட்ட வன்மை யாளர். எங்களூரில் கோயில் கொண்டிருக்கும் அருள் மிகு வேதபுரீஸ்வரர், திருஞான சம்பந்தர் அவர் களால், ஆண்பனை பெண்பனையாகப் பாடப் பெற்ற பெருமைக்குரிய பெருமான். அவர் துணை வியார் பாலகுஜாம்பிகையார். அந்த அம்மையார் மீது "இளமுலை நாயகி பிள்ளைத் தமிழ்" என்ற பொருள் செறிந்த நூலைப் பாடியவர் பானுகவியார். அத்தகு பெரும் புலமை வாய்ந்த பானுகவியாரை வாதத்தில் வென்றவர் திரு. வீரபத்திரப் பிள்ளை அவர்கள்.

அவர் வேலூரில், இன்று வெங்கடேசுவரா மேல் நிலைப்பள்ளி என அழைக்கப்பெறும் அன்றைய ஸ்ரீமகந்த தேவஸ்தான உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று விட்டார். அவர் இடத்திற்குக் காவேரிப் பாக்கம் உயர்நிலைப் பள்ளியில் பணிபுரிந்திருந்த திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் வந்து சேர்ந்தார். தென் ஆர்க்காடு மாவட்டம்.

*புலவர் அவர்கள் கடைசியாக எழுதிய கட்டுரை.

மயிலத்துக்கு மேற்கில் பத்து கி. மீ. தொலைவில் உள்ள ஔவையார் குப்பம் என்ற ஊரில், அவ்வூர்க் கணக்கு எழுதி வந்த திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் மகனாகப் பிறந்தமையால் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை என அழைக்கப்பட்டவர்.

மகாவித்துவான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள் எங்கே. இவர் எங்கே எனச் சிலநாள் இவரை மதிக்காமலே இருந்த மாணவர்களில் நானும் ஒருவன். ஆனால் ஔவை அவர்களின் பாடம் நடத்தும் முறை புதுமையானது. அன்று நடத்த வேண்டிய பாடத்திற்கான குறிப்புகளை முன்பாகவே தேர்வு கொண்டல்லது பாடம் எடுக்க மாட்டார்; பாக்களை இசையோடு பாடுவார்; சொல் பிரித்து பொருள் விளங்கப் பாடுவார்; புதிய பாடம் எடுத்துக் கொள்வதற்கு முன்னர் பழைய பாடத்தை மாணவர் எந்த அளவு புரிந்து கொண்டுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள சில பல கேள்விகளைக் கேட்பார். அம்முறையில் ஒரு நாள் அரிச்சந்திர புராணத்தில் வரும் ''அவமேபுறம் அறைந்தமை'' என்ற தொடரில் வரும் ''அறைந்தமை'' என்ற சொல்லுக்குச் சொல்லிலக்கணம் கூறுமாறு கேட்டார். அதுவரை இலக்கணம் என்றால், இலக்கணத்திற்குப் பாடமாக வைத்திருக்கும் நூலில் ஒரு பக்கம் இரண்டு பக்கங்களை ஒப்பிப்பதோடு சரி; அதனால் சொல்லிலக்கணம் என்பது என்ன எனப் புரியாமல் விழித்தோம். அவர் ''இடவழுவமைதி தனித்தன்மைப் பன்மை'' என்பது தான் இதன் சொல்லிலக்கணம் என்றார்.

எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ''இடமாவது, வழுவாவது, அமைதியாவது தனித்தன்மைப் பன்மையாவது'' என விழித்தோம். அதன் பிறகு, இவரிடம் நல்ல தமிழ் அறிவு இருக்கிறது என்பதை உணர்ந்து மதிக்கத் தொடங்கினோம்.

வகுப்பில் ஒருநாள் ''என்னிடம் தமிழ் கற்க விரும்பும் மாணவர்கள் எழுந்து நிற்கலாம்'' என்றார், எல்லோரும் எழுந்து நிற்கவும், உடனே அவர் என்னிடம் படிப்பதானால், மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்கவேண்டும்; அதற்கு ஒப்புக் கொள்பவர் மட்டுமே நிற்கலாம் என்றார். நான், மா. கந்தசாமி, வ. வேதபுரி, பி. குப்புராவ் ஆகிய நால்வர் மட்டுமே நின்றாலும், மாலையில் வீட்டிற்குச் சென்றோம் பணத்தோடு; தமிழ் கற்க எந்த அளவு ஆர்வம் இருக்கிறது என்பதைக் கண்டு கொள்ளவே, ஐந்து ரூபாய் சம்பளம் என்றேன். சம்பளம் எதுவும் வேண்டாம் தமிழ் கற்றுத் தருகின்றேன்' என்றார்.

வகுப்பு தொடங்கிற்று. திருவையாறு திரு. உலகநாதம் பிள்ளை அவர்கள் இயற்றிய ''கன்றும் கனி உதவும்'' என்ற உரை நடை நூலைக் கொடுத்து, அதை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கப் ''பணித்தார்.'' பாரி மகளிர் வரலாறு கூறும் சிறந்த உரை நடை நூல் இது. அது முடிந்ததும், ''கார் நாற்பது'', ''களவழி நாற்பது'' என்ற எளிய பொருள் விளக்கம் பெறவல்ல. அதே நிலையில் ஆழமாகவும் பொருள் நிறைந்த நூல்களைக் கற்றுத் தந்துவிட்டுப் பின்னர் ஒருநாள் தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம், ஒருநாள் திருக்குறள் பரிமேலழகர் உரை எனச் சொல்லித்தந்தார்.

பாடம் தொடங்குமுன்:

திருவிளங்கு பழமொழியும் சீர்விளங்கு
புலவர் பலர் சிறப்பத் தோன்றி
சருவிளங்கு பாக்கள் பல உரைகள்
பல ஆக்குதால் களவாம் வாய்மை

மருவிளங்கு தமிழ்மொழியின் மருங்கு
எழுந்தது என விளங்கும்
திருவிளங்கு வள்ளுவர் திருக்குறள் கண்டவர்
அடியாய்ச் சிரமேற்கொள்வார்.

என்ற பாடலை எல்லோருமாகப் பாடுவோம்.

1934-இல் பள்ளி இறுதி வகுப்பை முடித்ததும் அவர் தந்த பயிற்சியின் துணையால் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களை நானே படிக்கத் தொடங்கினேன்.

1935இல் ''காவிரி'' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி. தஞ்சாவூர் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடாகிய ''தமிழ்ப் பொழிலு''க்கு அனுப்பினேன். அது வெளிவந்த பிறகே ஆசிரியர்க்குத் தெரியும். இதுவே என் எழுத்துப் பணியின் தொடக்கம்.

ஊரில் ''வாகீச பக்த ஜன சங்கம்'' என்ற பெயரில் ஒரு தமிழ்ச்சங்கம் இருந்தது. அது மேலே கூறிய திருக்கோயில் திருவிழா நடைபெற்ற தைத்திங்களில் பத்துநாட்கள் உபயச் சொற்பொழிவு நடத்தி வந்தது. ஔவை அவர்கள் பங்கு கொண்டதும், அது புதுநடை போடத் தொடங்கிவிட்டது. தமிழ்நாட்டில் உள்ள திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் உள்ளிட்ட பல சமயப் புலவர்கள் வந்து சொற்பொழிவு ஆற்றுவார்கள். அவர்கள் பேசியன எல்லாம் கேட்ட எனக்கும் நாமும் ஏன் பேசக்கூடாது'' என்ற உணர்வு எழவே, ஆசிரியர் அறிவுரையோடு ''சைவ இளைஞர்கள் முன்னிருக்கும் கடமைகள்'' என்ற தலைப்பில் பேசினேன். அதுவே என் முதற் பேச்சு.

எங்கள் ஊரில் ''பானு கவி மாணவர் தமிழ்ச் சங்கம்'' என்ற பிறிதோர் அமைப்பும் இருந்தது. கம்ப இராமாயணத்தை ஆழ்ந்து படிக்காமலே பட்டி

மன்றம், வழக்காடு மன்ற மேடைகளில் நின்று கொண்டு வெறும் சொல் சாலம் காட்டுவார் போல் அல்லாமல் ஆழமாகப் படித்து ''வாலிவழக்கு'' என்பன போலும் அரிய நூல்களைப் படைத்த அமரர் திரு.புரிசை முருகேச முதலியார் போன்றவர்கள் பானு கவியாரின் மாணவர்கள். அவர்கள் உருவாக்கியது அச்சங்கம். அதிலும் நான் பங்கு கொண்டவன்தான்; ஆண்டுதோறும் திருவத்திபுரத்திற்கு வந்து செல்லும் ஞானியார் அவர்கள் அயர்ந்து உறங்கத் தொடங்கும் போது, அவர் உறங்கும் வரை அவர் கால்களைப் பிடித்துவிடும் பழக்கமுடைய என்னை, ஒருமுறை அவர் தலைமையில் ''மணிவாசகர் அளித்த திருவாசகம்'' என்ற தலைப்பில் பேசுமாறு பணித்து விட்டார்கள். சங்க இலக்கியங்களை ஓரளவுகற்றவனே அல்லது,சமய இலக்கியம் படித்தவன் அல்லன். ஆனாலும் திருக்கோவையாரில் ஒருசில பாக்களைப் பள்ளியில் படித்தவன். என் தந்தையார், மார்கழி மாத விடியற் போதில் படிக்கும் திருவாசகப் பாக்களைக் கேட்டுக் கேட்டுச் சில பாடல்களை நினைவில் வைத்திருப்பவன். அதனால் தன்மகள் அவள் விரும்பும் இளைஞனோடு அவள் சென்றுவிட்ட போது, அவர்களைத் தேடிச்சென்ற தாய், எதிரே வந்த ஓர் இள ஆணையும் ஓர் இள மகளையும் அணுகி, உங்களைப்போன்ற இருவர் இவ்வழியில் செல்வதைக் கண்டீர்களா எனக் கேட்க, அதற்கு அந்த இளைஞன், ஒன்று இருவரையும் பார்த்தேன் அல்லது இல்லை என்று கூறியிருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக ''என்னைப் போன்ற இளைஞரைப் பார்த்தேன்'' எனக் கூறிவிட்டுத் தன் பக்கத்தில் நிற்கும் தன் காதலியைப் பார்த்து ''இந்த அம்மா, வேறு யாரோ ஒருவரைப் பற்றிக் கேட்கிறார்களே! அவர்களைப்பற்றி உனக்குத் தெரியுமா?'' எனக் கேட்டதாக வரும்.

''ஆளி அன்னானைக் கண்டேன் அயலே தூண்டா விளக்கனையாய்? என்மாயோ அன்னை சொல்லியதே'' என்ற பாட்டைப் பாடிவிட்டு எதிரில் இருவர் வர, ஆணை மட்டும் பார்த்துப் பெண்களைப் பார்க்காத அக்கால இளைஞரின் நாகரீகம் எங்கே? அழகிய இளமகளிரை—எங்கெல்லாம் காணலாம் என அலைபாயும் உள்ளத்தோடு, மகளிர் கல்லூரி வாயில்களிலும், திரையரங்குத் திடல்களிலும் காத்துக் கிடக்கும் இன்றைய இளைஞரின் நாகரீகம் எங்கே எனக் கேட்டு முடித்தேன்.

அடுத்து ''தந்தது உன்தன்னை; கொண்டது என் தன்னை'' என்ற—திருவாசகத் தொடரை எடுத்துக் கொண்டு, தருதல் என்றால், கொடுப்பவன் தாழ்ந்து, வாங்கிடுவான் உயர்ந்து நிற்கும் போது ஆள வேண்டிய சொல், இங்கு 'தந்த உன்தன்னே' எனக் கூறியதன் மூலம், சிவனைத் தாழ்ந்தவனாகவும், தன்னை உயர்ந்தவனாகவும் மதித்துள்ளரே மணிவாசகர், இது ஏன் என்ற கேள்வியைக் கேட்டு விட்டுப் பேச்சை முடித்துக் கொண்டேன்.

தலைமையுரையில், ஞானியார் அவர்கள் ''கோவிந்தன் பேசிய நேரம் சிறிய நேரம் என்றாலும், என் சிந்தனைக்கு மட்டுமல்லாமல் தலைவர் சிந்தனைக்கும் அரிய வேலை கொடுத்துவிட்டார்,' எனக் கூறிப் பாராட்டினர்.

மற்றுமொரு நிகழ்ச்சி : நான் வித்துவான் பட்டம் பெறாத நேரம். ஆசிரியர்பால் பின்னர் தமிழ் கற்க வந்த கோமான் மா. வீ. ராகவன் அவர்கள், அந்த ஆண்டு வித்துவான் தேர்வு எழுதியிருந்தார். அந் நிலையில், திருவத்திபுரத்திற்கு வருகைதந்த, எங்கள் ஆசிரியரின் ஆசிரியர் கரந்தைக் கவியரசு ஆர். வெங்கடாசலம் பிள்ளை அவர்கள், ராகவன் தேர்வில்

நன்றாக எழுதியுள்ளார் எனக்கூறினார். அதுகேட்ட ஔவை அவர்கள் என்னைச் சுட்டிக் காட்டி "இவன் அவனைவிடத் தெளிவாகப் படித்தவன்" என்று கூறிச் சென்றுவிட்டார்.

கவியரசு அவர்கள் என்னை அருகில் அழைத்து அணைத்துக் கொண்டு, இலக்கியத்திலும், இலக்கணத்திலுமாகச் சில கேள்விகளைக் கேட்டார். கூடுமானவரை நல்ல விடையே கூறினேன். என் அறிவு எனக்குத் தானே தெரியும். மேலும் அவர் கேட்டால் விழிக்கவேண்டி நேரும். ஆசிரியர் நற்சான்றிற்கு மாசு நேரக்கூடும் என்பதால் கவியரசை விட்டு ஓடி விடத் திட்டமிட்டு அவரிடம் ஓர் ஐயம் எழுப்பினேன். "தொல்காப்பியர் எழுவாய் வேற்றுமைக்கு இலக்கணம் கூறும்போது எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே" என்றார். அதாவது சொல் எவ்விதத்திரிபும் இல்லாமல் இருப்பது. அவ்வாறு கூறிய அவரே 'நீயிர்' என்ற எழுவாய்ச் சொல்லுக்கு இலக்கணம் கூறும் போது "நம்முன் திரிபெயர்" என்று கூறியுள்ளார். இது முன் கூறிய இலக்கணத்திற்கு முரண் ஆகாதா? நும்மின் திரி பெயராகிய நீயிர் என்பது பிற வேற்றுமைகளை ஏற்கும் போது மீண்டும் நும் எனத் திரிந்து, "நும்மை நும்மால்" என ஆவானேன் என்ற இரு ஐயங்களை எழுப்பினேன். அவர் சிந்திக்கத் தொடங்கி விட்டார். விட்டால் போதும் என ஓடிவிட்டேன்.

பள்ளியில் மற்றொரு தமிழாசிரியர் திரு பாலசுந்தரநாயகர் அவர்கள் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார். அதற்கு ஒரு பாராட்டு விழா நடத்த தலைமை ஆசிரியரின் அனுமதி கேட்டோம்; அவர் மறுத்துவிட்டார். பானுகவி மாணவர் கழகமும் விழா நடத்தமுன் வரவில்லை. அதனால், ஔவைத் தமிழ் மாணவர் கழகம் என்ற புதிய கழகத்தைத்

தொடங்கி அவருக்கு மிகப் பெரிய பாராட்டு விழா வினை நடத்தினோம்.

ஓராண்டு கழிந்தது: 1936இல் முதலாண்டு விழா நடத்த முடிவு செய்தோம். விழாத் தலைமைக்கு மறைமலை அடிகளாரை அழைக்க முடிவு செய்தோம். ஆசிரியர் ஔவை அவர்கள் அவருக்குக் கடிதம் எழுத, அடிகளார் ஒரு நாளைக்கு 100 வெண்பொற்காசுகள் (அதாவது ரூபாய்) தர வேண்டும் என்றும் உணவு இவ்வகையில் இருக்க வேண்டும் என்றும் பதில் எழுதிவிட்டார்.

எங்களிடம் அவ்வளவு தொகை இல்லை; ஆனாலும் மறைமலையாரை அழைக்கும் ஆசையும் குறையவில்லை. ஒருநாள் அசிரியர் அவர்களிடமும் சொல்லாமல் பல்லாவரம் சென்று, அரைக்கிலோ கற்கண்டு, 2 சீப்பு வாழைப்பழம், வெற்றிலை பாக்கு, மலர்மாலை இவற்றை வாங்கிக் கொண்டு, அடிகளார் மாளிகை சென்று ஒரு தட்டு வாங்கி, அதில் இவற்றை வைத்து எடுத்துக் கொண்டு அவரிடம் சென்று அவர் கையில் கொடுத்துவிட்டுக் காலில் வீழ்ந்து வணங்கினேன். (நான் வணங்கிய முதல்வர் அவர்தான்)

வாழ்த்தி எழுந்திருக்கப் பணித்துவிட்டு: யார்? வந்தது ஏன் என வினவினார்: அழைக்க வந்தேன் என்றேன். ஔவைக்குக் கடிதம் எழுதி விட்டேனே என்றார். கையில் இருப்பது 200 வெள்ளிக் காசுகள் தாம் என்றாலும் தாங்கள் வந்து விழாத் தலைமை தாங்க வேண்டும் என வேண்டிக் கொண்டேன். ஒப்புக் கொண்டார்.

1936 மே 24, 25, 26 ஆகிய நாட்களில், திருவத்தி புரம் எங்கள் தெருவில், கோயிலை அடுத்த தெருவில் அவருக்காகப் பெரிய பந்தல் போட்டு விழா நடத்தினோம்.

வித்துவான் பட்டம் பெற்ற பின்னர், பி.ஓ.எல். பட்டம் பெறவேண்டும் என்ற ஆசை எழுந்தது. கல்லூரி சென்று படிக்காமல் வீட்டிலிருந்தே தேர்வு எழுதுவதானால் 3 ஆண்டு ஆசிரியராகப் பணி புரிந் திருக்கவேண்டும்; தேர்வுக்குப் பதிவு செய்யும்போது ஆசிரியராக இருக்கவேண்டும் என்பது பல்கலைக் கழக விதி. அதனாலும் இரண்டாம் உலகப் போர் காரணத்தால் அறிஞர் அண்ணா உள்ளிட்ட கழகத்தவர் அனைவரும் போரில் அமெரிக்கா இங்கிலாந்து, ரஷ்யா அணிக்கு ஆதரவாக பிரசாரம் செய்ய முனைந்து விட்டனர் அதனாலும் பள்ளியில் என் பழைய தமிழாசிரியர் சென்ற அதே பள்ளியில் ஆசிரியராக 1942இல் சேர்ந்தேன். 1944 வரை பணி புரிந்தேன். அங்கும் தமிழ்ப்பணி தொடர்ந்தது.

பி. ஓ. எல். தேர்வில் முதல் பகுதி. பி.ஏ. வகுப் பிற்குரிய ஆங்கில இலக்கியம் இரண்டாம் பகுதி. தமிழ் வித்துவான் தேர்வு. மூன்றாம் பகுதி. திராவிட மொழி ஒப்பிலக்கணமும், தென்னிந்திய வரலாறும் (ஆங்கிலத்தில்) இரண்டாம் பகுதியை முன்னரே படித்து விட்டேன். முதல் பகுதியையும் முடித்து விட்டேன். மூன்றாம் பகுதியில் தென்னிந்திய வரலாற்றுக்குரிய நூல்களாகிய திரு. நீலகண்ட சாஸ்திரியாரின் சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு, திரு. கோபாலன் அவர்களின் பல்லவ வரலாறு, திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர் களின் தமிழர் வரலாறு ஆகிய ஆங்கில நூல்களை வாங்கிக் கொண்டேன். கால்டுவெல் ஒப்பிலக் கணத்தை இலண்டனில் உள்ள தம் நண்பர் மூலம் வாங்கித் தந்தார் ஆசிரியர்.

அவற்றைப் படிக்கும்போது கால்டுவெல் ஒப்பிலணக்கத்தையும், பி.டி.எஸ். அவர்களின் தமிழர்

வரலாற்றையும் தமிழில் மொழி பெயர்த்தால் பி. ஓ. எல். படிக்கும் மாணவர்களுக்குப் பயன்படும் என எண்ணினேன்.

வேலூரில் பணிபுரிந்து கொண்டிருந்த போது, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவர், தாமரைச் செல்வர், அமரர் சுப்பையா பிள்ளை அவர்கள் சென்னையில், பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தலைமையில் 22-2-42இல் நடைபெறும் நற்றிணை மாநாட்டில் பாலைஎன்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றுமாறும், ஆற்றும் சொற்பொழிவை அப்படியே எழுதித் தருமாறும் வேண்டினார். நானும் அது செய்தேன்.

அம்மாநாட்டினைத் தொடர்ந்து திரு. சுப்பையா அவர்களின் நட்பு தொடர்ந்தது. இலக்கியம் தொடர்பான நூல்களை எழுதித் தருமாறு அன்புக் கட்டளை இட்டார். ''திருமாவளவன்'' என்ற முதல் நூல் 1951இல் வெளிவந்தது. [என் முதல் மகனின் பெயரும் திருமாவளவன் என்பது குறிப்பிடல் நலம்.] அதைத் தொடர்ந்து சங்ககாலப் புலவர் என்ற வரிசையில் 16 நூல்களையும் அரசர் என்ற வரிசையில் ஆறு நூல்களையும் வெளியிட்டார். புலவர் வரிசையில் முதல் நூல் 1952லும், அரசர் வரிசையில் கடைசி நூல் 1955லும் வெளிவந்தன.

தமிழ் எழுத்தாளர் உலகிற்கு அறிமுகமாகாத என் நூல்கள் இருபத்தைந்தை மூன்றாண்டு கால அளவில் வெளியிட்டு, எனக்குப் பெருமை சேர்த்த திருவாளர் பிள்ளை அவர்களுக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

எழுத்துப் பணி தொடர, மலர் நிலையம், வள்ளுவர் பண்ணை, அருணா பதிப்பகம் என்ற வெளி

யீட்டாளர் மூலம் பல நூல்கள் வெளி வந்தன. அரசியல் பணிகளுக்கிடையே கால்டுவெல் அவர்களின் ஒப்பிலக்கண மொழி பெயர்ப்பு 1959-ல் வள்ளுவர் பண்ணை மூலம் வெளி வந்தது.

1990 ஏப்ரல் 15 ஆம் நாளன்று, என் ஐம்பதாவது நூலாக திரு. பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் தமிழர் வரலாறு மொழிபெயர்க்கப் பெற்று. திரு. பிள்ளை அவர்களின் மருகர் திரு. இரா. முத்துக் குமாரசுவாமி அவர்கள் முயற்சியால் கழக வெளி யீடாக வெளியிடப் பெற்றது. அவருக்கு நன்றி.

இப்போது (1921) அவர் பணிக்க திருவாளர் வி. ஆர் இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் Origin and Spread of Tamils, ['தமிழரின் தோற்றமும் பரவலும்'] என்ற நூல் மொழி-பெயர்க்கப்பட்டு அச்சடிக்கப் பட்டுள்ளது. திருவாளர் பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் (Pre Aryan Tamil Culture) [ஆரியர்க்கு முந்திய தமிழர் பண்பாடு] ஆகிய நூலை மொழி பெயர்த்து முடித்துவிட்டு, அவரின் மற்றொரு நூலாகிய Stone Age in India (இந்தியாவில் கற்காலம்) என்ற நூலை மொழி பெயர்க்க எடுத்துக் கொண்டுள் ளேன். என் எழுத்துப்பணி தொடரும். குறள் பற்றி சங்க இலக்கியங்கள் பற்றிபல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். ''கல்வி கரையில; கற்பவர் நாள் சில'' காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி ஓரளவேனும் முற்றுப் பெறும்.

# இரங்கல் மாலை

## தலைவர்-கலைஞர்

தன்மான இயக்கத் தமிழ்ப்புலவரும், பாதை மாறாத பகுத்தறிவுவாதியும், நாற்பதுக்குமேற்பட்ட நூல்களைத் தமிழ் அன்னைக்குக் காணிக்கையாகப் படைத்தவரும் இயக்கத்திற்குவந்த எந்தச் சோதனையிலும் தலை நிமிர்ந்து நின்றவருமான புலவர் பெருந்தகை கோவிந்தன் அவர்கள் திடீரென மறைந்தது தமிழ்ச் சமுதாயத்திற்கு மாபெரும் இழப்பாகும்.

கழகத்தையும், பொதுப்பணியையும் இரு கண்களாகக் கொண்டு செயலாற்றிய அந்தச் செந்தமிழ் அறிஞரின் புகழ் என்றும் நின்று நிலைக்கும்.

## இனமானப் பேராசிரியர்

ஏறத்தாழ நாற்பது ஆண்டுகட்கு முன்னர் 1948-ல் திருவத்திபுரத்தில அவர் முன்னின்று நடத்திய பொங்கல் விழாவில் பேசுவதற்குத் தமிழ்த்தென்றல் திரு.வி.க. அவர்களுடன் என்னையும் அழைத்திருந்த நிகழ்ச்சி நினைவில் உள்ளது. அன்று முதல் இன்று வரை, எந்த நாளும் நிலையான நட்பு பாராட்டி. பலகாலும் என்னை அழைத்துப் பல நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளச் செய்த அவரது அன்பையும், அடக்கத்தையும், கொள்கை உறுதியையும், தொண்டு ஆர்வத்தையும் எண்ணுகின்றேன். அவரை வழிகாட்டியாகக் கொண்டு வளர்ந்த இளைஞர்கள் மிகப்பலர். பொதுநலம் போற்றித் தன்னலம் ஒதுக்கிய அவரது தகைமை இன்றைய தலை முறைக்கு எடுத்துக் காட்டு ஆவது.

பைந்தமிழ் வல்ல புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக் கண்கொண்டு ஆய்ந்து, பொற்காலத் தமிழர் தம் பெருவாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன் தமிழ்ச் சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமையை யுடையவர் புலவர்.

கபிலர், பரணர், அவ்வை, நக்கீரர், பெண்பாற் புலவர்கள், கிழார்ப் பெயர் பெற்றோர், மாநகர்ப் புலவர்கள் முதலான பலதலைப்புகளில் சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை என்று வெளிவந்த ஏடுகளும், சங்க கால அரசர் வரிசை என்று வெளிவந்த இரண்டு பகுதிகளும், சங்க இலக்கியத்தின் வாயிலாக அறிந்து கொள்ளக்கூடிய வரலாற்றுச் செய்திகள் பலவற்றை விவரிக்கும் பயன்மிக்க நூல்களாகும்.

பண்டைத் தமிழர் போர்நெறி என்னும் நூலும் 'கழுமலப்போர்' என்னும் ஏடும் அவரது பெரும் புலமையையும் ஆராய்ச்சித் திறனையும் புலப்படுத்துவன.

இன்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் திராவிட மொழி இயல் தந்தை எனப் பாராட்டப் பெற்ற டாக்டர் கால்டுவெல் அவர்கள் பலஆண்டுகள் ஆய்வு நடத்தி வெளியிட்ட திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் அரிய ஆங்கில நூலை மொழி பெயர்த்திடும் பணியையும் நிறைவேற்றியவர்புலவர். அவர்தம் தமிழ் தொண்டு, மொழி இயல் பயில்வோருக்கு எந்நாளும் பயன்படும் தகுதி மிக்கதாகும்.

தந்தை பெரியார் வழியில் பகுத்தறிவுப் பாதையில் நடைபோட்டு, பேரறிஞர் அண்ணா அவர்களின் அன்பிற்குரிய நண்பராய்த் திகழ்ந்து, தமிழும் தமிழினமும் தலை நிமிர்த்திட திராவிட முன்னேற்றக் கழகமே தகுந்த வழி செய்ய முடியும்

கோ. திருமாவளவன்

என்னும் உறுதிகொண்டு, பொதுத் தொண்டில் ஈடுபட்டு, எந்த நிலையிலும் அயராமல் பணியாற்றிய பெருமைக்குரியவர் புலவர்.

திராவிட முன்னேற்றக் கழகத்தின் சட்டப் பேரவை உறுப்பினராகத் திகழ்ந்த காலத்திலும், பேரவையின் துணைத் தலைவராகவும், தலைவராக வும் விளங்கிய காலத்திலும், அவர் செய்யாறு தொகுதி மக்களின் முன்னேற்றம் கருதி, ஆற்றிய பணிகள் ஒரு தனி வரலாறு.

கழகத் தலைவர் கலைஞரிடமும், என்னிடமும் அவர் காட்டி வந்த அன்புப் பிணைப்பு ஈடு இணை யற்றது. இந்த இயக்கத்துடன் இரண்டறக் கலந்து— கழகத் தோழர்களை எல்லாம் தம் உடன் பிறப்பாக மதித்து வாழ்ந்தவர் அவர். அவரது மறைவு இந்த இயக்கத்துக்கு ஏற்பட்ட பேரிழப்பு. தமிழ் ஆக்கத் துக்கு விளைந்த ஈடு செய்ய முடியாத இழப்பு.

புலவரின் மக்கள் அனைவரும் கல்வி நலமும் முயற்சித் திறனும் உடையராய் வளர்க்கப்பட்டவர் கள். அவர் தம் தந்தையின் வழிகாட்டுதலை எந் நாளும் மறவாது போற்றி அவரது தகுதிக்குச் சான்றாகத் திகழ்வார் என்பதில் ஐயமில்லை. ஆயினும் அவர்கட்கு ஆறுதல் உரைத்திடுவதற்குத் தான் இயலவில்லை.

'தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை' என்னும் பாவேந்தர் மொழியைத் துணையாகக் கொண்டு ஆறுதல் காண்போமாக!

வாழ்க புலவரின் புகழ்!

## விடுதலை வீரமணி

திமுகவின் மூத்த முன்னோடிகளில் ஒருவரும், சட்டப் பேரவையின் முன்னாள் தலைவரும், சுய

மரியாதை வீரருமான திருவத்திபுரம் புலவர் கா. கோவிந்தன் மறைவு அதிர்ச்சி யூட்டக்கூடிய மாபெரும் இழப்பு ஆகும். தந்தை பெரியார், அறிஞர் அண்ணா ஆகியவர்களுடன் இயக்கத்தில் இணைந்து செயலாற்றிய அவர் தி.மு.க. பிரிந்த பின்பு அதன் வழி இறுதி மூச்சு அடங்கும் வரை எத்தனை சோத னைகள் ஏற்பட்டபோதும் உறுதியாக நின்றவர் ஆவார்.

செய்யாறு தொகுதி இன்று இவ்வளவு வளர்ச்சி பெற்று இருப்பது அவருடைய ஆற்றல்மிகு உழைப்பு தான் காரணம் என்பதை யாராலும் மறுக்க முடியாது.

திராவிடர் கழகத்தின் சார்பில் பொங்கல் திருநாளை திராவிடர் திருநாளாக ஒரு வாரம் செய்யாறில் கழகத்தோழர்களுடைய ஒத்துழைப் புடன் நடத்தி வரலாறு ஏற்படுத்தியவர். இரணியன் அல்லது இணையற்ற வீரன் என்ற புரட்சிக்கவிஞரின் நாடகத்தைத் தடையைமீறி நடத்த, தோழர்கள் கை தாகி, கழக வரலாற்றில் அடக்கு முறைக்கு எதிராக அன்னாளில் போர்க்கொடி தூக்கி லட்சிய முழக்கம் தெரிய வைத்ததற்கு உழைத்த மாவீரர். அவரது மறைவு திராவிட இயக்கத்தின் இழப்பு. அவருக்கு நமது இயக்கத்தின் வீர வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அவரது குடும்பத்தினருக்கும், அவரது பிரிவை இக்கட்டான நேரத்தில் சந்திக்கும் கலைஞர், பேராசிரியர், மற்றும் தி.மு.க.வினருக்கும் நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்து அவரது துயரத்தில் நாமும் பங்கு கொள்கிறோம்.

# அளிதோ தானே!

ஔவை நடராசன்

சிறிய தந்தையராக எங்கள் குடும்பத்தி னர் அனைவரும் 'அப்பா' என்று பரிவோடு அழைத்த புலவர் கா, கோவிந்தனார் மறைவு ஆறாத் துயரத்தில் நம்மை ஆழ்த்துகிறது. மறைவதற்கு நான்கு நாட்களுக்கு முன்னருங் கூட என் தந்தையாரையும், அன்னையாரை யும் நினைவுகூர்ந்து எழுதிய குறிப்பையும், 'கற்கால இந்திய நாடு' என்ற நூல் பற்றிய மொழிபெயர்ப்புச் சிந்தனையுமாகப் புலவர் எழுதிய கடிதத்தை இப்போது கண்டாலும் என் கண்கள் நீர் மல்கி நிற்கின்றன.

பேரவைத் தலைமை என்பது அரசியல் சார்பால் புலவருக்கு விளைந்த பெருமை: எனினும் பெருந்தமிழ்ப் புலமை என்பது அவரது ஊனோடும் உயிரோடும் ஒட்டி வளர்ந்த திறமையாகும். "யான் எழுதிய உரையைப் புலவர் கோவிந்தனார் முடித்து வைப்பார்" என்று எந்தையார் பேசியதை அடிக்கடி புலவர் நினைத்து நெகிழ்வார்கள். எளிதில் எவரும் எண்ணிப் பாராத அரிய செயல்களை மேற்கொள்வதுதான் புலமை வீறுடையாருக்குப் பொருந்துவதாகும். அந்த

வகையில் 'கால்டுவல் ஒப்பிலக்கணத்தையும்', 'தமிழர் சீர்திருத்தம்' என்னும் வரலாற்றிலக்கியத்தையும் வரைந்த நம் புலவர் திறனைத் தமிழுலகம் என்றும் நன்றியோடு பாராட்டும். பவள விழாவின்போது தம்மோடு உடனுழைத்த கட்சியன்பர்களில் நலிந்தவர்களை அழைத்து, தாம் ஈட்டிய செல்வத்தை வழங்கிப் புலவர் புரவலராகவும் திகழ்ந்தார், 'அன்னோனை இழந்த தமிழுலகம் இனி என்னாவது சொல் அளியது தானே!' என்ற இரங்கலுரையை எழுதுவதைத் தவிர வேறெழுத என்னால் இயலவில்லை, அன்னையார் கண்ணம்மாள் அவர்களும், அருமந்த செல்வர்களும் 'அப்பா' ஆற்றிய பணிகளைத் தொடர்ந்து புகழ் விளக்கேற்றுவார்கள் என்பதில் ஐயமில்லை

# சிற்றுருவம்; பேருள்ளம்

லேனா தமிழ்வாணன், கல்கண்டு

புலவர் அவர்களின் மகள் திருமதி மலர்விழி முருகேசனும், நானும் பச்சையப்பனில் தமிழிலக்கியம் பயின்றவர்கள் என்ற வகையிலும், புலவர் அவர்களின் இன்னொரு மகள் திருமதி தேன்மொழி முருகன், கல்வி வாழ்க்கையில் என்னை நன்கு நெறிப்படுத்தி உதவியவர்கள் என்ற வகையிலும் எங்கள் அறிமுகம் தொடங்கியது.

இரு தமிழ்க் குடும்பங்களின் உணர்வுகள் ஒன்றாக இருக்கும் என்கிற அடிப்படையில் புலவர் அவர்களின் இல்லத்திற்கு நான் செல்வதுண்டு. அப்போது புலவர் அவர்கள் சபாநாயகராக இருந்த நேரம்.

கழகத்தின் மூத்த தலைவர் என்ற வகையிலும் சட்டமன்ற நடவடிக்கைகளை மிக அருமையாக நடத்திச் சென்றவர் என்ற முறையிலும் மிகுந்த செல்வாக்கோடும் புகழோடும் விளங்கிய நேரம் அது.

வீட்டு வாயிலில் போலீஸ் காவல். உள்ளே ஆர்டர்லிகள்; கட்சிக்காரர்கள்; விண்ணப்ப மனுக்களைக் கையில் வைத்திருப்பவர்கள்; செயலர்கள்; அலுவலர்கள் என்று வீடே கலகலப்பாக இருக்கும். முற்றிலும் புதியவனான எனக்கு, இந்தச் சூழ்நிலை மிகுந்த தயக்கத்தையே ஏற்படுத்தும். ஆனாலும் புலவர் குடும்பத்தினர் அனைவரும் காட்டும் பிரியம் இத் தயக்கத்தை விரட்டியடிக்கும்.

ஒருமுறை நான் புறப்படத் தயாராக, புலவர் அவர்களும் தம் அறையை விட்டு வெளியே வர, என்னை மலர்விழி அறிமுகப்படுத்த, ''அப்படியா,'' என்றதோடு எங்கள் சந்திப்பு முடிந்துபோனது.

அதற்குப் பிறகு பல சந்தர்ப்பங்களில் சந்திப்பு நிகழ்ந்த போதுகூட எங்கள் சந்திப்பு சிக்கனமான

தாகவே இருந்திருக்கிறது. நெருங்கிய பழக்கம் இல்லையே தவிர, அவரைத் தள்ளி நின்று வியந்து இரசித்தவர்களுள் நானும் ஒருவன். அவரது நன் மக்கள் அவரைப் பற்றிச் சொல்லக் கேள்வியுற்று அவர்மீது நான் கொண்டிருந்த நன்மதிப்பு மேலும் வளரலாயிற்று.

நான் மாணவப் பருவத்தைக் கடந்து, பத்திரிகை யாளன் ஆனதும் அவரை முன்னிலும் கூர்ந்து கவனிக்கலானேன். புலவர் ஒரு வித்தியாசமான அரசியல்வாதி என்பது என் தீர்மானமான கருத்து. வன்முறைகளையும் குறுக்குப் பாதைகளையும் கற்றுக் கொடுக்கவல்ல அரசியலுக்கு, புலவரை மாற்றக் கூடிய வலிமை ஒருபோதும் இருந்தது இல்லை. அரசியலுக்கு இன்றையத் தலைமுறையினர் நடுவே கொஞ்சநஞ்ச மரியாதை இருக்கிறது என்றால், அது புலவர் போன்ற பெருமக்களால் உருவாக்கப்பட்டது தான் என்று துணிந்து சொல்லலாம்.

அவர் அதிர்ந்து பேசி நான் கண்டது இல்லை. அவர் ஒரு சுடு சொல் சொன்னதாக நான் கேள்விப் பட்டது இல்லை. அரசியலில் நுழைந்த பலர், குடும்பத்தைச் சரிவரக் கவனிப்பது இல்லை. புலவர் குடும்பம் பெரிய குடும்பம் என்றபோதும், குடும்ப உறுப்பினர் ஒவ்வொருவர் மீதும் அவர் காட்டிய தனிப்பட்ட அக்கறை எல்லாக் குடும்பத் தலைவர் களாலும் காட்டப்படக்கூடியதே இல்லை.

பொதுவாக, வயதானவர்களின் மரணம் என்பது பல வீடுகளில் சகஜமாக எடுத்துக் கொள்ளப் படுவதைப் பார்த்திருக்கிறேன். 76 வயதுப் புலவர் அவர்களின் மரணம் அந்தக் குடும்பத்திற்கு எந்த அளவு பாதிப்பை ஏற்படுத்தியது என்பதைச் செய்யாறில் கண்கூடாகக் கண்டவர்களால்தான் உணர முடியும். ஓர் இளம் குடும்பத் தலைவரைப்

பறிகொடுத்த குடும்பம் எந்த அளவுக்குப் பாதிக்கப் பட்டிருக்குமோ அதற்கு இணையான பாதிப்பைப் புலவர் குடும்பத்தினரின் அழுகுரல்கள் புலப் படுத்தின.

செய்யாறில் அவரது உடல் அடக்கம் செய்யப் பட அவரது வீட்டிலிருந்து மூன்று கி.மீ. தூரத்தி லிருந்த அவரது தோட்டத்திற்கு எடுத்துச் செல்லப் பட்டபோது, ஊர்வலத்தின் தலைப்பகுதி தோட்டத் திலும் வால்பகுதி செய்யாறின் நுழைவாயிலின் அருகேயும் இருந்தது. ஊர் மக்களே திரண்டு விட்ட ஊர்வலம் அது.

அவரது இறுதி ஊர்வலத்தின்போது செய்யாறு மக்களின் நன்றி வெளிப்பாடு நன்கு புலப்பட்டது. வயதான மூதாட்டிகள்கூடக் கண்கலங்கி நின்றதைக் கண்டேன்.

செய்யாறுக்கும், சுற்றுப் பகுதிக்கும் அவர் செய்த சேவைகளை எழுதத் தனிக் கட்டுரை வேண்டும். அந்த செய்யாற்றில் மட்டும் புலவர் பிறந்திரா விட்டால்? செய்யாறைப்பற்றி நினைக்கவே அச்ச மாக இருக்கிறது.

நானும் திரு. வள்ளுவர் பண்ணை பழநியப்பன் அவர்களும், திரு. முத்துக்குமாரசாமி அவர்களும் புலவரவர்களின் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டபோது 'மிஸ்டர் பொதுஜனம்' உயர்வாகக் குறிப்பிட்ட பல செய்திகளை நினைவுபடுத்திப் பார்க்கும்போது ஓர் அறிஞன் சொன்ன பொன் மொழி நினைவுக்கு வருகிறது. 'ஒருவனது வாழ்க்கை என்பது அவன் எத்தனை வருடங்கள் வாழ்ந்தான் என்பதைக் கொண்டு நிர்ணயிக்கப்படுவது அல்ல; மாறாக, எத்தனை இதயங்களில் அவன் நிறைந்தான் என்பதைக் கொண்டே நிர்ணயிக்கப்படுகிறது.'

# கொள்கைக் கோமான்

இரா. முத்துக்குமாரசாமி
சைவ சித்தாந்தக் கழகம்

சைவக் குடும்பத்தில் தோன்றி, சுயமரியாதை இயக்கத்தைத் தழுவி, தமிழையும் அரசியலையும் போற்றி, ஊருக்கு உழைப்பதையே உயர்பணியெனக்கொண்டு 76 ஆண்டுகள் வாழ்ந்து, சிறந்து, புகழ்பெற்று, விருதுகள் பெற்று, நிறைவாழ்வு வாழ்ந்த புலவர் அவர்கள் மறைவு இட்டு நிரப்ப முடியாத இழப்பேயாகும். வாழ்வில் எத்தனை உயர் பொறுப்புகள் வகித்தபோதும் ஒழுக்கத்தின் மொத்த உருவாய் வாழ்ந்தவர் அவர். தாம் ஒழுக்கசீலராய் வாழ்ந்ததுடன் உற்றாரும் மற்றாரும் ஒழுக்கமுடன் வாழவேண்டுமென்று வற்புறுத்தியவர். அவர் தோன்றியிராவிடில் சங்ககால அரசர்,புலவர் வரலாறு எங்கே? கால்டுவெல் திராவிட இலக்கண மொழிபெயர்ப்பு எங்கே? சங்க இலக்கிய அறிமுக நூல்களெங்கே? பாலைச் செல்வி எங்கே? குறிஞ்சிக் குமரி எங்கே? தமிழர் வரலாறு எங்கே? இவை எதுவுமே தமிழ் மக்கட்குக் கிடையாது போயிருக்கும். அரசியல் வாழ்வில் இடருற்ற போதும் கொள்கைகளுக்காக வாழ்ந்த கோமான் அவர். அவர் மறைவால் செய்யாறு புலம்புகிறது. செந்தமிழ் அரற்றுகிறது. திராவிட இயக்கம் திகைத்து நிற்கிறது.

# என் புலவர் அண்ணன்

டாக்டர் கா. நடராசன்

என் புலவர் அண்ணனைப் படம் பிடித்திட முழு நீள வெண் திரைப்படங்கள் வேண்டியிருக்கும். முது நிலை தத்துவ ஆய்வுக்காகச் சில மாணவர்கள் அவரையே, அவர் வாழ்க்கைத் தத்துவத்தையே, ஆய்வு மையமென ஏற்று சிறப்பு அடைந்ததை அறிவோம். அந்தளவு ஆழ்கடல் என் அண்ணன். என் நினைவில் தங்கிய என் அண்ணனை முழுமையும் படம் பிடிக்க இயலாததாயினும் எனக்குத் தெரிந்த சிறு ஒளிக் கீற்றுகள் வழி ஒருசிறு படம் பிடித்திடுவேன்.

எனக்குப் பாலர் பாடம் புகட்ட எனக்குப் பட்டாடை உடுத்தி என்னை, பண்டாரம் பள்ளிக்கு அழைத்துச் சென்ற என் அண்ணன்.

பின்னர், தம்பியேனும் கல்லூரி சென்று படிக்கட்டுமென, B.Sc. பட்டப் படிப்பு மட்டுமல்ல M.B.B.S படிக்கவும், பின்னர் M. D. ஏற்கவும் வழி வகுத்த என் அண்ணன்.

மூடப் பழக்கமென உணர்ந்த போதும் தாய் தந்தையர் வகுத்த வழி, தன் திருமணத்திற்கு முன் சிகப்பு பட்டாடை உடுத்தி காங்கி அம்மனுக்குக் கரகம் எடுத்து ஊர்வலம் வந்த என் அண்ணன்.

கந்தர் சஷ்டி சமயம் தன் தந்தையே வீரபாகுவென தலைமை ஏற்க போர் வீரனென, கந்தனுக்குக் காப்பு கட்டி கஜமுகன் போன்ற சூரனைச் சம்மாரம் செய்த என் அண்ணன்.

தமிழ் புத்தாண்டு தோறும் தனக்குத் தமிழ் இலக்கியம் தந்த தன் ஆசானுக்குத் தமிழ்க் கனிகள் நிறைந்த தட்டெடுத்து தன் அன்புக் காணிக்கை அளித்த என் அண்ணன்.

தன் ஆசான் தந்த தமிழ் இலக்கிய இன்பத்தை 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் சீரிய கருத்துக்கேற்ப, ஔவைத் தமிழக மாணவர் கழகம் கண்டு, அதற்கென ஆண்டு தோறும் மறை மலை அடிகள் என்ன, திருப்பாதிரிப் புலியூர் ஞானி யார் சுவாமிகள் என்ன, தஞ்சை உமாமகேஸ்வரன் பிள்ளை அவர்கள் என்ன, தமிழ்த் தென்றல் திரு. வி. க. என்ன, சோமசுந்தர பாரதியார் என்ன எனப்பல தமிழ் இலக்கிய மேதைகள் வழி தமிழ் இலக்கிய விழா எடுத்து எங்களுக்கெல்லாம் தமிழ் புகட்டிய என் அண்ணன்.

தமிழ் விழா, அரசியல் கலந்த பொங்கல் விழா வென உருமாறிய போது

எங்கள் வீதி இடம் கொள்ளாது என, பரந்த வெளிப்புரத்தே மாபெரும் பந்தல் அமைப்பார். தலைவனே ஆயினும் உயரமான மரக்கழிகளில் ஏறி பாங்கான பெரும் பந்தல் வேய்ந்து, விழா எடுப்பார்.

'பொங்கல் விழா' என்றாலே அது திருவத்திபுரம் பொங்கல் விழா எனக் கூறுமளவு சிறப்பான பொங்கல் விழாக்கள் கண்ட என் அண்ணன்.

எளிய குடும்ப நிலையை மனதில் கொண்டு கல்லூரிகள் செல்லாமலே, தனித்துப் படித்தே B.O.L,. M.A, எனப் பல்கலைக் கழகப் பட்டங்கள் பல பெற்ற என் அண்ணன்.

சீருடை அணிந்து குழைத்துப் பூசிய விபூதி யோடு அழகான சந்தனப் பொட்டு சூடி திருப்பதி தேவஸ்தான வெங்கடேஸ்வரா வேலூர் உயர் நிலைப் பள்ளியில் தமிழ் ஆசிரியனாகப் பணியாற்றிய என் அண்ணன்.

அன்று சூரனை சம்மாரம் செய்த என் அண்ணன்.

பின்னர், இந்தி வெறி ஆதிக்கம், சமுதாய ஏற்றத் தாழ்வுகள் என பல கொடுமைகளைச் சம் மாரம் செய்ய பெரியார், அறிஞர் அண்ணாவின் கருத்துகளை ஏற்று தமிழ்ப் பற்றோடு நாட்டுப் பற்றினையும் கலந்து பல நற்பணிகள் புரிந்த என் அண்ணன். அவ்வழி பல மாநாடுகள் கண்டவன். செங்கல்பட்டு மாநாடு சமயம் தன் அரசியல் தலை வன் பேரறிஞர் அண்ணாவோடு ஒருங்கமர்ந்து ஊர்வலம் வந்த என் அண்ணன்.

தான் ஏற்ற இவ்வகை சீரிய கருத்துக்களுக்காகப் பலமுறை சிறை சென்ற செம்மல். சென்னை மத்திய சிறையில், செய்யாறு சார்பு சிறையில் தன் இருதயம் பழுதுற்ற நிலையிலும் உண்ணாவிரதமிருந்து சிறை சென்ற செம்மல்; இவ்வாறு பல சிறைகளில் நான் கண்ட என் அண்ணன்.

பெரியார் கண்ட ஈரோட்டுப் பாதையில் தொடங்கி, அண்ணா தீட்டிய காஞ்சிபுரத் திட்டங் களை மேற்கொண்டு, அரசியலில் ஈடுபட்டு, பலமுறை தம் தொகுதி மக்களால் சட்டமன்ற உறுப்பினராகப் பணி புரிந்தவர். தன் தொகுதி மக்களுக்குப் பல நற்பணிகள் புரிந்தார். சட்டமன்ற உறுப்பினர்கள் எவ்வாறு இயங்க வேண்டுமென்பதற்கு புலவரே எடுத்துக் காட்டு எனப் பணி புரிந்த என் அண்ணன் உதவி சபாநாயகராகவும், சட்டமன்றத் தலைவராக

வும், கட்சி வேறுபாடு இன்றி சிறப்பாக இயங்கிய என் அண்ணன்; அவ்வழி மேலை நாடுகள் சென்று உலகை வலம் வந்து, பல கலந்துரை மாநாடுகளிலும் கலந்து கொண்ட என் அண்ணன்.

அறிஞர் அண்ணா அரசினர் கலைக்கல்லூரி அரசினர் மகளிர் மேல் நிலைப்பள்ளி அறிஞர் அண்ணா அனாதைகள் இல்லம் அவரின் நற்பணி களுக்கு எடுத்துக்காட்டுகள். மக்கள் சிலர் அவரை மறந்தாலும், இவை என்றும் அவர் பெயர் கூறி நிற்கும்.

தன் சிறப்பான ஆராய்ச்சிகள் வழி பல தமிழ் ஆராய்ச்சிப் புத்தகங்கள் இயற்றியவர். தன் பவள விழா சமயம் தன் புத்தகங்களின் பொன் விழாவை யும் கண்டவர் என் அண்ணன். தமிழ் உலகம் உள்ள வரை இவையும் அவர் புகழ் பாடும்.

அவர் அரசியல் அறிவு கூர்மைக்கு அவரின் சிறந்த பேச்சுத் திறமைக்கு, அன்று, அறிஞர் அண்ணாவுக் குப்பின் என் அண்ணனே சிறப்பான மேடைப்பேச் சாளன் எனும் என் கருத்துக்கு ஒரு எடுத்துக்காட்டு.

ஒரு சமயம் மாற்றுக் கட்சித் தலைவர்கள் பலர் கூடி இரு தினங்கள் மாநாடு நடத்தினார்கள். மறு நாள் பேசிய இவர் சிலமணி நேரங்களில், அவர்களின் கருத்துகள் அனைத்தும் மாயமாலங்கள், உண்மை கருத்துகள் தம் இயக்கத்தை சார்ந்ததென மக்கள் பலரும் வியந்து ஏற்கும் வண்ணம், அவர்கள் பேச்சு களைத் தவிடுபொடியாக்கிய என் அண்ணன்.

எனக்குத் தந்தை பெரியார் தலைமையிலும் தம் மக்கள் பலருக்கும் முறையே அறிஞர் அண்ணா தலைமையிலும், கலைஞர் கருணாநிதி அவர்கள் தலைமையிலும் திருமணம் நடத்தியவர்.

என் மக்கள் மூவருக்கும் தாமே தலைமை ஏற்று எளிய முறை திருமணம் நடத்தியவர் என் அண்ணன்.

என்னிடம் கொண்ட பாசத்திற்கு அவர் பண்புக்கு எடுத்துக்காட்டு:

தன் மகன் இங்கர்சால் ஆபத்து நிலையில் இருந்த போதும் அவனை விட்டு ஆபத்து நிலையில் இருந்த என்னிடம் வந்த சமயம் பிற பிள்ளைகள், தம் தம்பியை விட்டுச்செல்வது குறித்து வினாவியபோது "உங்கள் தம்பி மறைந்தால் வேறு தம்பி கிடைக்கக் கூடும். என் தம்பி மறைந்தால் எனக்கு வேறுதம்பியை அளிக்க என் தாய் இல்லையே" எனக் கூறிய என் அண்ணன்.

ஆன பல சிறப்புகளோடு வாழ்ந்த என் அண்ணன் இன்று இல்லை.

அதிலும் அவர் மறைந்த அன்று நான் உடன் இருக்க இயலவில்லை. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" எனும் உயர் தத்துவப்படி இவ்வுலகமே நம் இல்லமென ஏற்று, உலகின் மறுபக்கத்தில் வாழும் என் மக்கள் சிலரோடு இருந்த சமயம் என் அண்ணன் இங்கே மறைந்து விட்டார். உடனே பறந்துவர இய லாத நிலையில் என் மனத்தளவில், என் எழுத்தளவில் அஞ்சலி செலுத்துகிறேன்.

ஆங்கில இலக்கிய ஆசிரியன் ஜான்சனுக்கு சிறந்த மாணவன் பாஸ்வல். அறிஞர் அண்ணாவின் ஒரு சிறந்த மாணவன் புலவர் அண்ணா. ஆனால் என் அறிவியல் கருத்துகளுக்கு, ஜான்சனும் இல்லை, எனக்கு ஒரு பாஸ்வலும் இல்லையே என ஏக்கமுற்ற எனக்கு அன்பு அண்ணன் இருவர் இருந்தனர்.

செய்யாறு கூட்டங்களுக்கு அழைக்கச் சென்ற என்னை, "இரு போகலாம் நடராஜா" என என்னை

அன்போடு அழைத்து பக்கத்தில் இருக்கச் செய்த என் பெரிய அண்ணன் அடையாறு மருத்துவமனை யில் வாடியபோது அவரின் கடைசி ஐந்து நாட்கள் சமயம் உடன் இருந்தேன். மறைந்தபின் அவர் உடலுக்குக் கண்ணீர் அஞ்சலி செலுத்தினேன்.

ஆனால் என் உடன்பிறப்பு என் புலவர் அண்ணன் மறைந்தபோது உடன் இருக்கவும் இயலவில்லை. அவர் உடலுக்கு நேரில் கண்ணீர் அஞ்சலி செலுத்த வும் இயலவில்லை.

''இறப்பும் பிறப்பும்-ஒரு சிந்தனை'' என் ஒரு அறிவியல் கட்டுரை.

அதற்கேற்ப, என் அண்ணன் இறந்த அன்றே' சில மணிநேரத்தில் என் இரண்டாம் மகளுக்கு மகள் பிறந்தாள். இது ஒரு மறுபிறவி நிகழ்ச்சி அல்ல, எனி னும் இது ஒரு உலக தத்துவம் எனும் உண்மையை மனதில் கொண்டு அமைதியுறுவோம்.

புலவர் அண்ணனின் சீரிய கருத்துக்களை ஏற்று அவரை, அவர் கருத்துகளை என்றும் வாழவைப் போம். அறிஞர் அண்ணாவைப் போலவே புலவர் அண்ணன் எங்கும் மறையவில்லை. அவர் நம்மிடையே நம் உள்ளத்தே என்றும் உறைவார்.

# கலங்கரை விளக்கம்

பேராசிரியர் டாக்டர் மா. நன்னன் எம்.ஏ., பிஎச்.டி.,

புலவர் கா. கோவிந்தன் அவர்களின் உண்மை நண்பர்களில் நானும் ஒருவன். ஆகவே அவர் தம் மறைவு அவலக் கவலைக்கு ஆட்படுத்திக் கையறு நிலையில் தள்ளி என்னை அலைக்கழித்துவிட்டது.

புலவர் அவர்கள் முறையாகத் தமிழ் கற்றுத் தேரியவர். ஆழமாகவும் பரவலாகவும் கற்றுத் தமிழ் மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றோடு தமிழினம், தமிழ்நாடு போன்றவற்றிலும் தெளிவுற்ற வராய் விளங்கினார். தமிழ் இலக்கிய, இலக்கணங் களில் மட்டுமேயன்றிப் பிற பல துறைகளிலும் நல்ல புலமை சான்றவர் அவர். அவர்தம் கட்டிளமைக் காலம் முதற்கொண்டே திராவிட இயக்க அரசியலில் ஈடுபட்டு அதன் முன்னோடிகளில் ஒருவராக விளங்கி யவர். சமூகச் சீர்திருத்தத்தில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டு அவர் கடுமையாக உழைத்து இருக்கிறார். இவை தவிர மக்களுக்காக பொதுத் தொண்டிலும் அவர் ஒரு கலங்கரை விளக்கம். இவை தவிர அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய சான்றாண்மை வாய்க்கப் பெற்றுத் தன்னிகரற்றுச் சுடர் ஒளி பாய்ச்சியவர் அப்பெரு மகன். மேலும் தமிழ்ப் புலமை, அரசியல், சமூகவியல், தொண்டு, சான்றாண்மை ஆகிய ஆறிலும் தனித் திறம் வாய்ந்து விளங்கிய அவர் அவற்றில் ஆதாயம் எதையும் எதிர்பார்த்து அடைந்தாரல்லர். எனவே அவர் மறைவு இவை ஆறுக்கும் நேர்ந்த பேரிழப்பு என்பேன். அவர் நடந்த பாதையில் அவர் போல் நடக்க முன் வருகிறவர்கள் யார் யார் என்னும் வேணவாவுடன் எதிர்பார்த்து ஏங்குகிறேன்.